தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டான். நேற்று புத்திக் கொதிப்பும், கோபமும் குறையாதது மட்டுமில்லை. அதிகமாகவும் ஆகிவிட்டது.

கிரிதரன் இடப்புறம் புரண்டு மெல்லக் கண் விழித்து கட்டிலைப் பார்த்தான். காலியான இடத்தை மெல்லத் தொட்டான். வளர்மதி இந்நேரம் சீர்காழி தாண்டியிருப்பாள்.

"அரசு அப்பாவ மறந்துடுவியா." ஸ்டேஷனில் இரண்டு வயதுக் குழந்தையை முத்தமிட்டபோது, 'மாட்டேன்' என்றுதலையாட்டியது. பதிலுக்கு முத்தமிட்டது. வலது கையால் கிரிதரன் இடது காதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. வளர்மதி 'உம்'மென்று உட்கார்ந்து நடுவிரல் நெய்ல் பாலீஷைப் பிய்த்துக் கொண்டிருந்தாள்.

"இன்னிக்குக் காலையில் டிக்கெட் எடுத்து, இப்ப உனக்கு லோயர் பர்த் கிடைக்குமா. எத்தினி கூட்டம் பாரு. இந்தக் குழந்தைய வச்சுக்கிட்டு ஜெனரல் கம்பார்ட்மெண்ட்ல தஞ்சாவூர் போயிடுவியா. எப்படி கெடச்சிது லோயர் பர்த். ஏன் குடுத்தாங்கன்னு யோசனை பண்ணினியா. பத்திரிகை பேரச் சொன்ன உடனே 'டக்'ன்னு குடுத்திட்டான். டிக்கெட் எக்ஸாமினரே நேர வந்து உன்ன உக்கார வச்சிட்டுப் போனான். பத்துப் பைசா செலவில்லாம கிடைச்சுது. நீ என்னடான்னா அறிவுகெட்டதனமா பத்திரிகை வேலைய விடுங்கற. பத்திரிகை வேலைய விட்டுட்டு உங்கய்யா மாதிரி வெத்தலை பாக்கு கடையா வைக்க முடியும்."

"நா அதுக்குச் சொல்லல."

"பிறகு வேற எதுக்குச் சொன்ன.." மறுபடியும் ஸ்டேஷனில் கோபம் வந்தது. ஸ்டேஷனில் கோபித்துக் கொள்ள முடியாது. அந்தச் சண்டையை அடுத்தவர்கள் கேட்டால் சிரிப்பார்கள். 'இதுக்கெல்லாம் ஒரு சண்டையா. நல்லாருக்கு குடித்தனம்' என்று தலையிலடித்துக் கொள்வார்கள். பக்கத்து போர்ஷனில் கூட வளர்மதி பொய் சொல்லிவிட்டுத்தான் கிளம்பினாள். "அப்பாக்கு உடம்பு சரியில்லை. தஞ்சாவூர்லேர்ந்து இப்ப டெலிபோன் வந்தது. போய் நிலைமையைப் பார்த்திட்டு திரும்பி வரலாம்னு இருக்கேன்." என்று கிளம்பினாள்.

"நீ இருந்து பார்த்துட்டு வா வளர்மதி. கிரிதரன் நம்ம

வீட்ல சாப்டட்டும்."

"வேணாம்மா, நேரங்கெட்ட நேரத்துல வருவாரு. உங்களுக்குத் தொந்தரவாயிருக்கும்."

அதுதான்.. அதுதான் பிரச்சினையே. நேரம் கெட்ட நேரம் என்பதுதான் சண்டைக்குக் காரணம். அந்தச் சண்டையின் விளைவுதான் இப்படி ஊருக்கு முகத்தைத் தூக்கிக்கொண்டு போன கோலமே.

பத்திரிகை என்பது இருபத்திநாலு மணி நேரத் தொழில். எப்போதும் பரபரப்பாக இருக்கவேண்டிய கட்டாயம். எதுவும் எப்போதும் நடக்கலாம் என்ற எதிர்பார்ப்புடன் இருக்கிற நிலை. அதிலும் அரசியல் பத்திரிகைக்கு ஆசிரியராய் இருக்கிற கிரிக்கு மூளைச்சூடும். உடம்புப் பரபரப்பும் ஒரு விஷயத்தைப் பல்வேறு முனைகளில் யோசிக்க வேண்டிய கட்டாயமும், வடக்கும், தெற்கும், கிழக்கும், மேற்கும் இறக்கை கட்டிக்கொண்டு பறக்கும் பயணங்களும் சாதாரணமானவை.

அதிலும் அரசியல் வாரப் பத்திரிகையின் வேலை இன்னும் வேகமானது. தினசரிப் பத்திரிகையோடு போட்டிப் போடுகிற கட்டாயத்தில் உள்ளது. தினசரிப் பத்திரிகையில் வந்த செய்தியையே இன்னும் ஆராய்ந்து, கண், காது, மூக்கு வைத்து விலாவாரியாய்க் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ளது. 'பெண் தீக்குளித்து சாவு' என்றுதான் தினசரிப் பத்திரிகையில் வரும். போலீசார் புலன் விசாரிக்கிறார்கள் என்றுதான் செய்தி முடியும். போலீஸ் புலன் விசாரணைக்கு முன்பு வாரப் பத்திரிகைக்கு விசாரிக்க வேண்டும்.

'சரோஜாவின் தீக்குளிப்புக்கு யார் யார் காரணம்' என்பதைத் தெருத் தெருவாய் அலைந்து விசாரிக்க வேண்டும். இதுதான் என்று கண்டுபிடித்து பயமின்றித் தகவல் தரவேண்டும். 'மாமியாரும், புருஷனும் சேர்ந்து சரோஜாவைச் செருப்பால் அடித்தார்கள்.' என்பதை சாட்சியங்களோடு நிரூபிக்க வேண்டும். 'இது தற்கொலையல்ல. கொலை' என்று சந்தேகம் கிளப்ப வேண்டும். சென்னை நகர போலீஸ் தீர விசாரிக்குமா அல்லது வழக்கம் போல் தற்கொலை என்று தள்ளி விடுமா. ஒரு கொலையைத் தற்கொலை என்று மறைத்தவர்களை சரோஜாவின் ஆவி சும்மாவிடாது என்று கடைசியில் ஒரு குத்து குத்த வேண்டும். இந்த ஒரு செய்திக்கே பல பேர் கசப்புகளையும், வக்கீல்

நோட்டீஸ்களையும், டெலிபோனில் கொலை மிரட்டல்களையும் சந்திக்க வேண்டியிருக்கும்.

'பல்கலைக் கழகத்தில் ஒரு பக்காத் திருடன்' என்கிற அலசல் ரிப்போர்ட், இதைவிடக் கடுமையாக இருக்கும். இவர் கவர்னராவார். இந்தத் தேதியில் இந்த மந்திரியின் இலாகா மாற்றப்படும். இந்த அரசியல் வாதிக்கு இறங்குமுகம், இவருக்கு ஏறுமுகம் என்று எழுதவேண்டும். எழுதியவைகளில் நூற்றுக்குத் தொண்ணூறு பலிக்கும். இது தவிர, காட்டமான சினிமா செய்திகள்.

தமிழர்கள் வாழ்க்கை அமைதியானது. அசமந்த மானது. மாறுதல்கள் அதிகம் இல்லாதது. அவர் களுக்குப் பரபரப்பான அடுத்த வீட்டுச் செய்திகள் அல்வாத்துண்டு போல.

ஒரே ராசிக்கு நாலு பத்திரிகை நாலுவிதமாய் பலன் சொன்னாலும் நாலையும் கவனமாய்ப் படிக்கிறார்கள். அசமந்தமான ஜனங்கள் பரபரப்பாய்ப் பேசிக் கொள்ள ஒரு அரசியல் வாரப் பத்திரிகை ஆவேசமாய்ச் செயல்பட வேண்டியிருக்கிறது. டபுள் டம்மியில் முப்பத்திரண்டு பக்கங்கள் படங்களோடு நிரப்ப, வாரத்தில் ஏழு நாளும் ஓயாது வேலை செய்ய வேண்டியிருக்கிறது.

ஓய்வேயில்லை என்று சுத்தமாய்ச் சொல்லிவிட முடியாது. எப்போது வேலை. எப்போது வேலை இல்லை என்று நிர்ணயிப்பதுதான் கடினம். ஒருநாள் பகல் இரண்டு மணிக்கே வீட்டுக்கு வந்துவிட முடியும். இரவு முழுவதும் வீட்டிற்கே போக முடியாத நிலையும் சில சமயங்களில் ஏற்படலாம். பெரிய வாரப் பத்திரிகைகளில் எடிட்டர் கித்தாப்பான ஆள். நகத்தில் அழுக்கப்படாத வேலை. கிரிதரன் வேலை செய்யும் 'கால பைரவன்' சமீபத்திய சரக்கு. எடிட்டரே சகலமும் என நிர்ப்பந்தம்.

வளர்மதிக்கு அதுதான் வருத்தம். அந்த வருத்தம் கோபமாக கிரிதரன் காரணம். 'கால பைரவன்' பத்திரிகையில் ஆசிரியராகச் சேர்ந்த பிறகு காசுக்குக் கஷ்டமில்லை. வீட்டில் வசதிக்குக் குறைவு இல்லை. இரண்டு அறை, ஒரு ஹால் கொண்ட பெரிய பிளாட்டில் டி.வி., வீடியோ, குளிர்பெட்டி, வாட்டர் ஹீட்டர், டைனிங் டேபிள் எல்லாம் இருந்தன. வெஸ்பா

ஸ்கூட்டர் இருந்தது. ஆனால், வளர்மதி மாலை ஐந்து மணிக்கு பவுடர் போட்டுக் கொள்ளும்போது புருஷன் எப்போது வருவான் என்று தெரியாமலேயே பவுடர் போட்டுக் கொள்ள வேண்டியிருந்தது.

புருஷன் வந்த பிறகு போட்டுக் கொள்ளலாமா என்று கேள்வி வந்தது. ஆனால், இரண்டு மணிக்கு வந்து புருஷன் கதவைத் தட்டினால் எந்தப் பொண் டாட்டி நடுநிசியில் பவுடர் போட்டுக் கொள்வாள்.

'சோறு போடும்மா' என்று சட்டையைக் கழற்றியபடி இரவு இரண்டு மணிக்கு நிற்பவனைப் பார்க்க பாவமாய் இருக்கும். இருப்பதைச் சூடு பண்ணிப் பரிமாற, அவசரமாய்ச் சாப்பிடும் புருஷனைப் பார்க்கப் பரிதாபமாய் இருக்கும். தட்டிலேயே கை அலம்பி, டைனிங் டேபிளிலேயே கட்டுரை எழுதத் துவங்கும் புருஷனைக் கண்டு அலுப்பு வரும்.

"அப்ப நா தூங்கப் போட்டா." கொட்டாவி விட்டபடி கேட்ட கேள்விக்கு, 'சரி' என்று தலை அசைக்கிற புருஷனைப் பார்த்துக் கோபம் வரும். மூன்றரை மணிக்கு முதுகை நிமிண்டும் சைகை உணர்ந்து திடுக்கிட்டுத் திரும்புவாள். 'என்ன வரலையா' என்று உரசும் புருஷனின் செயல் எரிச்சலைத் தரும்.

"எல்லாத்துக்கும் ஒரு நேரம் இருக்கில்ல. மணி மூணரை, பேசாம படுங்க." ஒருக்களித்து சுருண்டு கொள்ளத் தோன்றும்.

"எனக்குத் தூக்கம் வரலை வளர்மதி." அவன் இறுக்க, திமிரத் தோன்றும்.

ஆனால் வளர்மதி பல சமயங்களில் விட்டுக் கொடுத்திருக்கிறாள். 'சரி ஒழியட்டும்' என்று ஈடு கொடுத்திருக்கிறாள். நேற்று நாலேகாலுக்கு முதல் குயில் கூவும்போது மேலே விழுந்தவனைத் தள்ளும் போதுதான் சண்டை வந்து விட்டது.

"என்னதான் நெனைச்சிட்டிருக்க உன் மனசில்." கிரிதரன் சீற, இன்னும் ஆங்காரம் வந்துவிட்டது.

"மனுஷிதானே நான், நாலேகால் மணிக்கு வந்து எழுப்புறீங்களே."

"எனக்குப் புரியுதும்மா. தூக்கம் வரல. அதுதான்.. அதான்.. கொஞ்ச நேரம்." இருட்டிலும் அவன் முகம் பரிதாபமாகத்தான் இருந்தது.

"இது கெட்ட பழக்கம்."

"எது."

"தூங்கறதுக்குன்னு பொண்டாட்டி பக்கத்துல படுக்கறது."

"வேற வழி தெரியலையே."

"கண்ணை மூடிக்கிட்டு ஒண்ணு, ரெண்டு, மூணு எண்ணுங்க, தானாத் தூக்கம் வரும்."

"எழுநூத்துச் சொச்சம் எண்ணிட்டேன்."

"நான் முடியாது."

"ஏன்."

"காலைல அஞ்சரை மணிக்கு நா எழுந்திருக்க வேணாமா. பால்காரரு ஒவ்வொரு தடவ பெல்ல அழுத்திட்டு வாசல் பக்கம் பாலை வச்சிட்டுப் போயிடறாரு. பட்டுன்னு எழுந்து போயி எடுத்தா உண்டு. இல்லைன்னா பூனை தூக்கிட்டுப் போயிடுது. போன மாசம் பால்காரரோட பெரிய சண்டை.. இங்கே பாலே வெக்கலைன்னு. அந்த ஆளு பதிலுக்குத் துண்டு போட்டுத் தாண்டறான்."

"இப்ப என்ன சொல்ற."

"நா முடியாது."

"வளர்மதி, ப்ளீஸ். தூக்கம் வரலைம்மா."

"கைய எடுங்கப்பா. உங்களுக்கு சொல் புத்தியும் இல்ல, சுய புத்தியும் இல்ல.." அங்குதான் கோபம் முளைவிட்டது.

"உன் தஞ்சாவூர் ராங்கி புத்திய காம்பிச்சிட்டல்ல. உங்களுக்கெல்லாம் ஆ, ஊன்னு கத்தற புருஷந்தான் சரி. தொட்டதுக்கெல்லாம் அறையறவந்தான் கரெக்ட். மதிப்பா, இலக்கியமா பழகினா இப்படித்தான் ஆடுவீங்க."

"ஆமா, அப்படியே இலக்கியம் பொங்கி வழியிது. இங்க கூட்டிட்டுப் போறேன். அங்க கூட்டிட்டுப் போறேன்னு எத்தனை தடவை ஏமாத்தியிருக்கீங்க. நா எதனா சண்டை போட்டிருக்கேனா. வாய்யா.. போய் யான்னு உங்கம்மா கத்தற மாதிரி ரோடுல நின்னு கத்தற பொம்பளதான் உங்களுக்குக் கரெக்ட். தஞ்சாவூர் ராங்கியாம்.. உங்களுக்குத்தான் சூளை மேட்டுப்புத்தி."

"வளர்மதி, இப்ப வர்றியா, இல்லையா."

"தள்ளிப் படுங்க." ஒருக்களித்துக் கொண்டு விட்டாள். இருட்டில் தடவிய கையைத் தள்ளி விட்டாள். 'வெடுக்'கென்று அவன் கிள்ளியதும் வலியில் துள்ளியெழுந்தாள்.

"சே.. உங்களோட குடித்தனம் பண்றதுக்கு எங்கேனா ஊர் விட்டு ஊர் போய் விபச்சாரம் பண்ணலாம். வாங்க, வந்து தொலைங்க." புடவையை உருவித் தரையில் எறிந்தாள். அவள் முகத்து வெறுப்பும், பேச்சுத் தொனியும், அலுப்பும் அவனை மாற்றின. வேகத்தை அடக்கின. தயாராக இருந்தவளை உற்றுப் பார்த்தான். 'வேண்டாம்' என்று தள்ளிப் படுத்துக் கொண்டான். அவள் சிறிது நேரம் பார்த்து விட்டுப் புடவை அணிந்து கொண்டாள். தூங்கிப் போனாள். அன்றைக்கும் பாலைப் பூனை கொண்டு போய் விட்டது. பக்கத்து வீட்டில் கடன் வாங்கி காப்பி போட்டுக் கொடுக்க, காபி வெந்நீராய் இருந்தது.

"ஏன் காப்பி இப்படியிருக்கு."

"எல்லாம் உங்களாலதான்."

"வாசல்லதானே இருக்கு பால் டெப்போ, இன்னொரு பால் வாங்க முடியாதா."

"போய்க் கேட்டேன். அ்ரை அவர் பொறுத்து வான்னான். அரை அவ்ர் பொறுத்துப் போனேன். இல்லன்னுட்டான்."

"அஞ்சு நிமிஷம் நின்னு ஒரு பால் வாங்கியாரத்துப்பில்ல. பேச்சு மட்டும் வாய் கிழியுது." இரவில் அவள் மறுத்த கோபம் பகலில் துளிர்விட்டது.

"இந்தக் காபிக்கு ஒரு கேடுமில்ல, குடிங்க.." அவளும் பதிலுக்குக் கோபப்பட்டாள். கிரிதரன், கையிலிருந்த காபியை நிதானமாய்த் தரையில் ஊற்றினான். டம்ளரைக் கொண்டு போய் பேசினில் போட்டான். சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு பாத் ரூமிற்குள் போனான். இன்று முழுவதும் அவளை அழ வைக்க வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டான். வெளியே வந்தான். கொட்டிய காபி துடைக்கப் பட்டிருந்தது.

பால் டெப்போவில் கூடக்காசு கொடுத்து ஒரு பாக்கெட் பால் வாங்கி அவள் உள்ளே ஓடி வந்தாள்.

"கொஞ்சம் இருங்க. இன்னொரு காபி போட்டர்றேன்."

"ஒரு எழவும் வேணாம்."

"ஏன்."

"நீங்க நெனச்ச நேரமெல்லாம் நாங்க காப்பி குடிக்க முடியாது." அவன் சீற்றம் அவளுக்குக் கலவர மூட்டியது. சண்டை பெரிதாய் போய்விடுமோ என்கிற

பயம் வந்தது. அதேசமயம் கோபமும் கிளர்ந்தது.

"நீங்க கேட்டபோது கொண்டாந்து காலடில வைக்கணுமாக்கும்." முணுமுணுத்தாள்.

"ஆமா, அதுக்குத்தான் பொண்டாட்டி." பேச்சு காப்பி பற்றியில்லை என்பது இரண்டு பேருக்குமே புரிந்து போயிற்று.

"இப்ப என்ன செய்யணும். உங்க தாவாக்கட்டைய புடிச்சுக்கிட்ட கொஞ்சணுமா." வளர்மதி சீறினாள்.

'ஆம்' என்பது போல அவன் பேசாதிருந்தான். பேப்பர் பிரித்து படிக்கத் துவங்கினான்.

"பெரிய பத்திரிகை ஆசிரியரு. விளக்குமாறு. செத்துப் போன பொம்பளைக்கு வரிஞ்சு கட்டி எழுதுவாரு கொலையா, தற்கொலையான்னு. இப்படி கொஞ்சங் கொஞ்சமா கொல்றதை எங்கே போய் எழுதறது. எவங்கிட்ட சொல்றது."

"என்னடி கொன்னுட்டாங்க உன்னை."

"கொல்லு பரவால்லை, மத்தியானம் என்ன சமைக்கணும்."

"எனக்குத் தெரியாது."

"காரக்குழம்பு வைக்கட்டுமா. சாப்ட்டுத்தான போவீங்க."

"எனக்குத் தெரியாது."

"ப்ளீஸ், சொல்லுப்பா. ராத்திரிக் கோபம் ராத்திரி யோட சரி. பகல்ல காட்டக்கூடாது." அவள் கீழிறங்கிக் கெஞ்சினாள்.

"காரக் குழம்பும், உருளைக் கிழங்கு பதார்த்தமும் பண்றேன். சாப்ட்டுட்டு அப்புறம் கோபிச்சுக்க.." சமையல் அறைக்குள் ஓடினாள்.

கிரிதரன் அவளை அழ வைக்கப் புதிதாய் ஒரு வழி கண்டுபிடித்தான். சமையல் பாதி நடந்து கொண்டிருக்கும் போது வெந்நீர் விளாவி குளித்தான். கண்மூடி, சாமி படத்திற்கு எதிரே நின்று, 'புத்தகத் துள்ளுறை மாதே' சொன்னான். அவசரமாய் சலவைப் பாண்ட்டும், சட்டையும் அணிந்து கொண்டான். பீரோவைத் திறந்து இருநூறு ரூபாய் பணம் எடுத்து பர்ஸில் வைத்துக் கொண்டான். தலை வாரிக் கொண்டான்.

"அரசுப் பையா, அப்பா டாட்டா." பையனிடம் கொஞ்சினான். வளர்மதி சமையலறையிலிருந்து எட்டிப் பார்த்தாள். திடுக்கிட்டாள். "சாப்பாடு." என்று

வினவினாள்.

"நா வெளிய பாத்துக்கறேன்."

"ஏன்." அவள் குரலில் துக்கம் மண்டியது.

"நீ பண்றது எனக்குப் புடிக்கல.."

"சாப்பாடா."

"எல்லாந்தான்."

"கஷ்டப்பட்டு பண்ணியிருக்கேன். ஒரு வாய் சாப்ட்டு போங்கப்பா."

"நானும் கஷ்டப்பட்டுத்தான் சம்பாதிக்கறேன். நாலாயிர ரூபாய் காசுக்கு நாயா, பேயா அலையறேன்."

"நா கெஞ்சிக் கேக்கறம்ப்பா, ப்ளீஸ்."

"நானும் கெஞ்சித்தான் கேட்டேன். உனக்குப் புரியல."

"நாலேகால் மணிக்கு எழுப்புனீங்கன்னா எப்படி முடியும்."

"ஏன்.. ஏன் முடியாது. உனக்குத் திமிரு. கெஞ்சறதுனால ஒரு அலட்சியம்."

"நா கெஞ்சறம்ப்பா. ப்ளீஸ் சாப்பிட்டுப் போங்கப்பா."

"யாரும் யாரையும் கெஞ்ச வேண்டாம். அவங்கவங்க வேலைய ஒழுங்கா பண்ணா போதும்."

"எனக்கு உடம்புக்கு முடியலன்னு சொல்றன்ல."

"பொய். முடியாதுன்னா என்ன பண்ணுவாங்கற திமிரு. அடிக்கறானா பார்க்கலான்னு ஒரு ராங்கி. அடிக்க மாட்டேன். புடிக்காத ஆளுங்களோட பேசவும் மாட்டேன்."

"வெடுக்குன்னு கிள்ளுனீங்கல்ல, இப்பக்கூட நோவுது. அது போகட்டும். நீங்க வயிறு நிறைய சாப்ட்டீங்கன்னா நானும் மனசு நிறைய.."

"வேணாம்." இரண்டு கைகளாலும் அவளைக் கும்பிட்டு விட்டு விலகி நடந்தான்.

"ஏன் இப்படி அட்டூழியம் பண்றீங்க."

"நானா, நீயா. யார் செய்யறது அட்டூழியம்."

"இப்ப சாப்ட்டு போகப் போறீங்களா, இல்லையா."

"காசு விட்டெறிஞ்சா சோறு. தாலி கட்டின தோஷத்துக்கு கொஞ்சம் தணிஞ்சு போலாம். எடுத்தெறிஞ்சு பேசறதுதான் என் வழின்னா."

"எல்லாத்தையும் விடுங்க. வந்து ஒரு வாய், ஒரே வாய் சாப்ட்டு போங்க."

"சாரி." அவள் கெஞ்சக் கெஞ்ச அவனுக்குள் பிடிவாதம் அதிகரித்தது. அவள் பணியப் பணிய

அகந்தை உள்ளே வளர்ந்தது.

அவள் வெறித்துப் பார்த்தாள். இத்தனை கெஞ்சியும் மதிக்காமல் வெளியேற முனைப்பாய் இருக்கிறவனை வெறுப்போடு பார்த்தாள்.

"இப்ப நான் என்ன செய்யணும். உங்க கால்ல விழுந்து அழணுமா."

"நோ, தேவையில்லை. மதிப்பாவே இரு. நானும் என் மதிப்பைக் காப்பாத்திக்கிறேன்."

"ஏன், உங்களை என்ன அவமதிச்சுட்டேன்."

"தூங்க முடியலை. தலை குடைச்சல். உள்ளுக்குள் ஆயிரம் யோசனை. வெளிய வாசல்ல போனா நூறு டென்ஷன்."

"அதுனால நீங்க தூங்கறதுக்கு என் தூக்கத்தைக் கெடுக்கணுமா."

"ஏன், வேற என்ன வேலை உனக்கு. ராத்திரி முழிச்சா மத்தியானம் தூங்கறது. ஆறு வேளை சாப்பிட்டு, மூணு வேளை தூங்கி, நாட்டு பன்னி மாதிரிதானே இருக்கே."

நாட்டுப்பன்றி என்பது அவளுக்கு கடும் கோபத்தைக் கொடுத்தது. 'விரல் சொடுக்கி கூப்புட்டா பொம்பளை வந்து அவுத்துட்டு நிக்கணும். அப்பத்தான் உத்தமி. இல்லன்னா நாட்டுப்பன்னி. இதுக்கு வேற ஆளைப்பாரு.' உள்ளே ரோஷம் பொங்கிற்று.

"சாப்பிட வரப்போறீங்களா இல்லையா."

"நீ சாப்பிடும்மா. வண்ணமா உட்கார்ந்து சாப்பிடு. நீ சாப்பிடத்தானே சம்பாதிக்கிறேன். ஆறுவேளை சாப்பிட்டு மூணு வேளை தூங்கி.."

"சரிதான் போய்யா.. சாப்டாட்டிப் போ."

அவள் முறைத்துக்கொண்டு உள்ளே போனாள்.

போர் முடியவில்லை. எதிரி சரண் அடையவில்லை. தொடர்ந்து யுத்தம், முற்றுகை என்று தீர்மானித்து விட்டாள்.

இதே வேகத்தோடு போர் முறையை உக்கிரமாக்குவது நல்லது என்று கிரிதரனுக்குப் பட்டது.

"அரசுப் பையா.. அப்பா டாட்டா. அம்மாவ ஜாக்கிரதையா பார்த்துக்கோ. நல்லா சாப்பிடச் சொல்லு. வீடியோ பசங்க வருவாங்க. வாசல்ல உட்கார்ந்து சிரிச்சு பேசச் சொல்லு. தங்கராஜு வந்தா அப்பாகிட்ட சொல்லு." குத்தலும் கேலியுமாய் இரண்டாவது கட்ட போர் துவங்கினான். இது சர்வ

நாசம் விளைவிக்கும் ராக்கெட் தாக்குதல். விளைந்தது.

வீட்டில் பொழுது போகாமல் தவிக்கிறாளே என்று கிரிதரன்தான் ஒரு வீடியோ கடைப் பையனை அவளுக்கு அறிமுகப்படுத்தினான்.

வந்த பையன் அவளைக் கண்டதும், "உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே." என்று வினவி, "அட, வளர்மதி." என்று முடித்தான்.

தஞ்சாவூர் சரபோஜி காலேஜில் இரண்டு பேரும் ஒன்றாய் படித்தவர்கள். வந்த பையனுக்கு காபி உபசரணை நடந்தது. பழங்கதைகள், நட்புகள், தெரிந்தவர்களைப் பற்றி விசாரணை நடந்தது. வளர்மதி, ஸீஸர் மனைவி மாதிரி, சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவள்.

"தங்கராஜு, நல்ல பிரிண்டா கொண்டாந்து கொடு. கேஸட்டுக்கு எத்தினி தரணும், எட்டா, பத்தா." கிரிதரன் கேட்டான்.

"அஞ்சு ரூபா கொடுங்க போதும். ஆனா ப்ளீஸ். ஒரே நாள்ல திருப்பிக் கொடுத்திடணும். உங்களுக்கு இது ஸ்பெஷல் கன்ஸெஷன்."

வளர்மதி தினம் காசெட் வாங்கினாள். அவன் சொல்லி நல்ல ஆங்கிலப் படங்கள் பார்த்தாள். பார்த்த படம் பற்றி கிரிதரனிடம் பகிர்ந்து கொண்டாள்.

"நான் கேட்ட படத்துக்குத்தான் தங்கராஜு காசு வாங்கறான். அவனா பாருங்க பாருங்கன்ற படத்துக்கு காசு வாங்கறதில்லை. ரொம்ப நல்ல மாதிரி."

"ஒருவேளை உம்பேர்ல லவ்வோ என்னவோ."

"என்ன பேச்சு இது."

"சும்மா சொன்னேன் வளர்மதி."

"காலேஜ்ல என்னைக் கண்டா பசங்க நடுங்கும். கிட்டகூட வரமாட்டாங்க. இப்ப கல்யாணம் ஆயிடுச்சு. பேசலாமேன்னு பேசறான். வேணாம்னா நிறுத்திடறேன்."

"அடட, எதுக்கு வளர்மதி.. நல்லா படம் பாரு. எனக்குக் கதை சொல்லு."

ஆனால் தாக்குதல் என்று ஆரம்பித்த பிறகு தயக்கம் உண்டா? யுத்தம் என்று முடிவு செய்த பிறகு தர்ம நியாயம் உண்டா?

"எப்ப எம்மேல அநியாயத்துக்கு சந்தேகம் வந்திடுச்சோ, அப்ப உன் கூட நா எதுக்கு குடித்தனம் பண்ணணும்?" உடனே ஏக வசனத்தில் இறங்கினாள்.

“பண்ணாதே, போ. உன்னால எனக்கு எந்தப் பிரயோஜனமும் இல்ல. நீ இருக்கறதும் ஒண்ணுதான், இல்லாததும் ஒண்ணுதான்.”

“நாலு நாள் ஓட்டல்ல தின்னு வயித்து நோவு வந்தா அப்ப பொண்டாட்டியோட அருமை தெரியும்.”

“சாவே வந்தாலும் ஒங்கிட்ட வர மாட்டேன். போதுமா?”

இது ஆங்காரம்தான். பேசிப் பேசி இது ஆத்திரமாகவும், அசூயையாகவும் மாறிய வித்தைதான். சமையற்கட்டு நிலைப்படி விளிம்பில் சோகமாய் மௌனமாய் சாய்ந்து நிற்கும் மனைவியை வெற்றிக் களிப்பில் ஒருமுறை பார்த்து விட்டு ஆபீஸ் வந்தாயிற்று. ஜெயித்துவிட்டதாய் மனசுக்குத் தோன்றிற்று. உண்மையில் இது வெற்றியில்லை என்ற எண்ணமும் வந்தது. ‘ஒன்பது நாற்பதுக்கு செங் கோட்டை பாஸஞ்சரில் தஞ்சாவூர் கிளம்புகிறேன்.’ என்று அவள் போனில் சொல்ல, வெற்றி ஆட்டம் கண்டது. அதேசமயம் தோல்வியை ஏற்கவும் மனசு வரவில்லை.

‘போகட்டும். என்ன இப்போ. ஒரு பொம்பளைக்கு அத்தனை கெத்து இருந்தா எனக்கு இருக்காதா?’ இறுக்கம் வந்தது.

‘அவங்க இஷ்டத்துக்கு ஆம்பளை வரணும். நம்ம இஷ்டத்துக்கு பொம்பளை வரமாட்டான்னா என்ன நியாயம்?’

“மடச்சி, எருமை மாடு. ஜெனரல் கம்பார்ட் மெண்ட் வாங்கியிருக்கியா, பர்த் ரிஸர்வ் பண்ணமாட்டியா?” எக்மோர் ஸ்டேஷனில் கிரிதரன் வளர்மதியைத் திட்டினான்.

“இல்லேன்னுட்டாங்க, என்ன பண்றது” பதிலுக்கு வளர்மதி கத்தினாள்.

“எம்புள்ள ஜெனரல் கம்பார்ட் மெண்ட்ல போகக் கூடாது. புடி இவனை.” மூன்று நிமிடத்தில் லோயர் பர்த் அனுமதி வாங்கி அலட்சியச் சிரிப்போடு வந்தான்.

‘பார் உன் புருஷன் சாமர்த்தியத்தை’ என்பது போல் நின்றான். வளர்மதி கண்டு கொள்ளவேயில்லை. வண்டி நகரும் வரை பேசவேயில்லை. “அப்பாவுக்கு டாட்டா சொல்லுடா.” என்று குழந்தை கையை மட்டும் அசைத்தாள். வண்டி நகர, துக்கம் கவிழ்ந்து கொண்டது. ‘தேவையா இது’ என்கிற கேள்வி வந்தது. பிள்ளையை மடியில் வைத்துக் கொண்டு, பொண்டாட்டி தோளில்

உரசிக் கிடந்து வீடியோ பார்த்தது நினைவுக்கு வந்தது. ஒருக்களித்துக் கிடந்தவளின் முதுகோடு ஒட்டிக் கொண்டு கால்போட்டபடி தூங்கிய ஞாபகம் வந்தது. 'மைசூர்பாகு வேணுமா?' பாதி கடித்து மீதி எச்சிலை மனைவி அவன் வாயில் திணித்தது நினைவில் தோன்றிற்று. கற்பரசியான மனைவியோடு நடந்த கலவியும், கலவியால் விளைந்த காதலும், காதலால் முகிழ்ந்த கலவியும் மனசுள் படமாய் வந்தது.

தூக்கமும் முழிப்புமாய் இரவு நகர்ந்தது. நாலு மணிக்கு குயில் கூவ, தூக்கம் சுத்தமாய்க் கலைய, உள்ளே நினைவுகள் கூவத் துவங்கின. கிரிதரன் தியானம் செய்யத் திட்டமிட்டான்.



கிரிதரன் முதுகை வளைத்து, தசைகளை இறுக்கி, நிதானமாய் சோம்பல் முறித்தான். எழுந்து பாத்ரூமுக்குள் போய் பல் விளக்கி, முகம் கழுவி ஹாலுக்கு வந்தான்.

கதவின் அடி வழியே ஆங்கில, தமிழ் பத்திரிகைகள் அடுத்த வீட்டுக் குழந்தைகள் போல் உள்ளே வழுக்கி ஓடி வந்தன. அகலமாய்ப் பிரிந்து நின்றன. காலைப் பேப்பரைத் தொடுவது மாதிரி சந்தோஷம் உலகத்தில் எதுவுமில்லை.

இப்போது பேப்பர் படிக்கலாமா, இல்லை தியானம் செய்யலாமா? பேப்பர் எப்போதும் படித்துக் கொள்ளலாம். இது தியானம் செய்யும் நேரம். தியானம் செய்ய வேண்டிய நிலைமை. சம்மணம் கட்டி ஹாலில் உட்கார்ந்து கண்கள் மூட, தரையில் கிடந்த பேப்பர் மனசுள் பிரிந்தது. எடுத்துப் படித்துவிட்டு தியானம் செய்யலாமே என்று தோன்றியது. அரசியல் வாரப் பத்திரிகையாளனுக்கு நாளிதழ் பத்திரிகை வேதம். அடி உரம். ஏதாவது ஒரு பரபரப்பு செய்தி நிச்சயம் இருக்கும். மனசு, பத்திரிகையிலேயே இருப்பது புரிய, மெல்ல விலக்கி ஆழ்ந்த நீலத்தில் மனசு செலுத்தினான். மனசு நீலத்தில் கண் இரப்பைக்கு அப்பால் இருந்த வெளிச்சத் துண்டுகள் மிதந்தன. துண்டுகளையே மூடின கண்ணுக்குள் உற்று நோக்க, ஒன்றாயிற்று. புத்தியில் ஒரேவித ஒலி கூடிற்று. ஒலியோடு, ஒலியின் நகர்வோடு புத்தி ஒற்றுமைப்பட, ஆழ்ந்த இருட்டு

கண்ணுள் தோன்றியது. வெளிச்சப்தங்கள் அன்னிய மாயின. காதில் மோதிவிட்டு புத்தியில் தங்காது போயின. புத்தி எங்கேயும் ஒட்டாது மிதந்தது. உள்ளே உடம்பு நாடிகளில் ஒரு சொடுக்கு சிலிர்ப்பு படர்ந்தது. ஆழ்ந்த துயில் மாதிரி ஒரு உணர்வு. அதேசமயம் இது தூக்கம் இல்லை என்கிற தெளிவு.

கண் விழித்தபோது இருபது நிமிடம் நகர்ந்திருந்தது. மெல்ல எழுந்து நிற்க உடம்பில் ஒரு கனக் குறைவு தெரிந்தது. கண்கள் எதிரே இருக்கிற சோபா செட்டை இலக்கின்றி பார்த்தன. எப்போதும் சோபாவில் உட்கார்ந்திருக்கும் வளர்மதி நினைவு வந்தது. அங்கே இல்லாத வளர்மதியை இருப்பதாய் நினைத்துக் கனிவுடன் பார்த்தான். இந்தக் கனிவோடு இருக்கும்போதே பார்த்திருந்தால் எந்தப் பிரச்சினையும் வந்திருக்காது. இல்லாதபோது தான் காதல் பொங்குகிறது. ஏன் இப்படி சண்டை போட்டோம் என்கிற ஏக்கம் வருகிறது. நல்லது.. அனுபவிப்போம். வளர்மதி இல்லாத வேதனையை அனுபவிப்போம். புத்திக்கு முழுவதும் பரவும்படி இனி சண்டையே இல்லை உன்னோடு என்கிற விதமாய் அனுபவிப்போம். மறுபடி மறந்து போகாமல், மறந்து போய் சண்டை வராமல் இன்று பிரிவை முழுவதுமாய் உணர்வோம். புத்தி ஆலோசனை சொல்லிற்று.

குளிந்து பேப்பர் பிரிக்க, வாசல் மணி ஒலித்தது. நிதானமாய் தினசரியை டீபாயில் வைத்துவிட்டு வாசல் நோக்கி நடந்தான். நடக்கும்போது விரல்களின் அசைவு எல்லாம் ஒரே நேரத்தில் மனசுள் பதிந்தது. அனிச்சை இல்லாது எல்லா அசைவும் தனக்குப் புரிந்தே நடப்பது போல்பட்டது. இதுதான் தியானத்தின் முதல் விளைவோ.. உடம்பு மொத்தமும் விழிப்பாய் எல்லா அசைவும், எல்லா யோசனையும் தனக்குட்பட்டதாய் இருப்பதுதான் உணர்வு நிலையோ.. இது தெளிவாய் இருக்கிறது. இனிமேல் தினமும் தியானம் செய்ய வேண்டும்.

தாழ் நீக்க, 'கால பைரவன்' போட்டோகிராபர் செல்லமுத்து எதிரே சிரித்தபடி நின்றான்.

"குட்மார்னிங் சார்."

"குட்மார்னிங் செல்லமுத்து. வா.."

"சார், மதுரைக்கு ஒரு ட்ரங்கால் செய்துக்கணும் சார்."

"தாராளமா செய்துக்கோ."

"என் தம்பிக்கு மெடிக்கல் சீட் கிடைச்சிடுச்சு சார். நாளைக்கு நோட்டீஸ் போர்ட்ல போடறாங்க. உடனே பொட்டிய எடுத்துக்கினு வாடான்னு சொல்லணும். அதான்." சந்தோஷக் கூவலாய் இருந்தது அவன் பேச்சு.

செல்லமுத்து மதுரைப்பக்கம் விவசாயக் குடும்பம். நாற்பது ரூபாய் காமிராவோடு சென்னைக்கு வாழ்வின் உயர்வு தேடி வந்தவன். நாலு வருடம் ஆகிவிட்டது. இது வரை அந்த சின்னக் காமிரா தவிர, சொந்தக் காமிரா இல்லை. பத்திரிகை உபயோகத்துக்கு இருக்கும் மினோல்டாவும், யாஷிகாவும்தான் அவன் தொழில் கருவிகளாய் இருந்தன. பத்திரிகைக் காமிராவைக் கடன் வாங்கிக் கொண்டு திருமண விழாவும் இலக்கியக் கூட்டமும் போட்டோ எடுத்துக் காசு வாங்கி, கொஞ்சம் கொஞ்சம் சேர்த்து சொந்தக் காமிராவுக்குக் கனவு கண்டு கொண்டிருக்கிறான். யார் கையில் என்ன காமிரா பார்த்தாலும் என்ன விலை என்று கேட்காமல் வரமாட்டான். பத்திரிகையில் வாங்கின காசைப் பாதி தன் சாப்பாட்டிற்கும், மீதியைத் தம்பி படிப்பிற்கும் பகிர்ந்து கொள்பவன். உடன்பிறப்புகள் முன்னேறும் என்று வெகு நம்பிக்கையோடு இருப்பவன். இந்த மெடிக்கல் சீட் பெரிய விஷயம்தான். அடிக்கடி அவன் அனத்திக் கொண்டிருக்கிற விஷயம்தான்.

"தம்பிக்கு மெடிக்கல் சீட் கிடைச்சிருச்சுன்னா குடும்பமே மெட்ராஸ் வந்துடலாங்க. லாயிட்ஸ் ரோடு குவார்ட்டர்ஸ்ல பத்திரிகை கோட்டா பிடிச்சு ஒரு இடம் எடுத்துட்டம்னா எல்லாம் வசதியாயிடும். ஓட்டல் சாப்பாடு ஒத்துக்கலைங்க. பாதி நாள் பன்னு, புரைல ஓட்டறேன். ஆனா ஒரு கவலை.."

"என்ன செல்லமுத்து..?"

"பனைமரத்துப்பட்டில மல்லிகை போட்டுருக்கோம். அதை விட்டுட்டு எங்கய்யா வருவாரான்னுதெரியலை."

"அவரை ஏன் இங்க இருங்கற. குவார்ட்டர்ஸ் கிடைச்சதும் நீ கல்யாணம் கட்டிக்க.. வர்றவ தம்பிக்கும், உனக்கும் ஆக்கிப் போடட்டும்."

"அப்படியும் ஒரு ஐடியா இருக்குது. தம்பிக்கு மெடிக்கல் சீட் கிடைக்கணும்.அதுக்கு முன்னாடி நான் ஒரு காமிரா வாங்கணும். சொந்தத்துல ஆயுதம் இருந்தா ஒரு தெம்பு இல்லீங்களா?"

"முன்னேறணும்னு ஆசைப்பட்டவனுக்கு எல்லாம் கிடைக்கும். நம்ம முதலாளிகிட்ட உண்மையா

உழைச்சுக்கிட்டு இரு. ஒரு சந்தோஷத்துல இந்தாடா நீயே வச்சுக்கன்னு மினோல்டா தூக்கி கொடுத்தாலும் கொடுத்துடுவாரு."

"அப்படியா சொல்றீங்க. போன வாரம் பாதி ஷோட்டோவுல அவரு யோசிக்கிற மாதிரி படம் எடுத்தேன். போட்டோ பார்த்துட்டு என்னடா.. மூஞ்சில கரி பூசினா மாதிரி படம் பிடிச்சிருக்க.. வேகமா வேலை கத்துக்கடான்னு திட்டிட்டாரு."

"விளக்கிச் சொல்லணும்."

"சொல்லணும்னு நினைச்சேன். ஒரு பயம், சரின்னு தலையாட்டி வந்துட்டேன். அப்பால லைட்டு போட்டு அவரை எடுக்கணும்."

பனைமரத்துப்பட்டி செல்லமுத்துவுக்கு உற்சாகமும் இருந்தது. உதறலும் இருந்தது. அவன் பட்டணத்தில் இன்னும் முட்டு வேர் ஊன்றாத செடி. இன்னும் கொஞ்சம் வளம் கிடைக்க தடம் பார்த்து இடம் பிடிப்பான். அதே சமயம் ஏதாவது செய்து பெரும் பேர் எடுத்து எல்லோரையும் சந்தோஷப்படுத்தி எப்படி யாவது முன்னேறுகிற வாய்ப்புக்கு காத்திருந்தான். அவன் தம்பிக்கு மெடிக்கல் சீட் என்பது பெரிய விஷயம். வளம் சேர்க்கும் காரியம். அவன் உடம்பு முழு வதும் சந்தோஷம் பரவியிருந்ததை உணர முடிந்தது.

"போன் செய்துக்க செல்லமுத்து."

"அக்கா இல்லீங்களா?"

"ஊருக்குப் போயிருக்கு."

"எதுனா விசேஷங்களா?"

"இல்ல, அவங்கப்பாவுக்கு உடம்பு சௌகர்யமில் லேன்னு தகவல் வந்துடுச்சு."

"அடடா.."

"ஒண்ணும் பயப்படும்படியா இல்லை, கூடமாட ஒத்தாசையா போயிருக்கு."

"வெறிச்சோடியிருக்கே வீடுன்னு பார்த்தேன்."

'வீடு மட்டுமா.. மனசும்தான்.' கிரிதரன் பதில் பேசாது பேப்பர் பிரித்தான்.

"சார்.. அப்படின்னா, இன்னொரு ரிக்வெஸ்ட்."

"என்னா.."

"இங்கனயே நான் குளிச்சுறட்டுமா.. எங்க எடத்துல தண்ணிப் பிரச்சினை."

"சரி.. துணிமணி?"

"பாதிநாள் படுக்கை ஆபீஸ்லதானே சார் அதனால

எப்பவும் பைல ஒரு அண்டர்வேர். ஒரு துண்டு வச்சிருப்பேன். இங்க குளிச்சுறட்டுமா."

"தாராளமா.. போன் பண்ணலையா."

"குளிச்சுட்டுப் பேசறேனே.. மணி ஆவலை. பஞ்சாயத்து ஆபிஸ் திறந்திருக்காது." செல்லமுத்து பேசியபடியே சட்டையை அவிழ்த்தான்.

இடுப்பும், மார்பும் வித்தியாசமில்லாத நீள் சதுர உடம்பு. வெய்யில் பட்டு கறுத்த விவசாய முதுகு. தன் உடம்பும் இப்படித்தான் இருந்தது. ஊரிலிருந்து ரிப்போர்ட்டர் உத்தயோகம் என்று வந்தபோது வயிறு ஒட்டி நெஞ்சுக்கூடு தூக்கி பிருஷ்ட சதையே இல்லாது இருந்தது. வளர்மதி கை சோறு, உடம்பில் மனசில் தெம்பு தர, வாழ்க்கை முறையே மாறிப் போயிற்று. மறுபடியும் இப்படி ஓட்டல் சோறும், பன்னும், புரையுமாய் அலையும் உள் மன ஆசைதான் அவளை சண்டையிட்டு விரட்டிவிட்டதா, தெரியவில்லை.

செல்லமுத்து ஷவர் திறந்து விடும் சப்தம் கேட்டது. பாட்டு விசிலாய்க் கேட்டது. தமிழ்ப் பேப்பரில் வெள்ளை அணியும், சிகப்பு அணியும் காரசாரமாய் ஒன்றை ஒன்று திட்டிக் கொண்டிருந்தன. ஆங்கில பேப்பரில் இராக்கின் மிரட்டலும், மத்திய அரசு ஆளுங்கட்சி உட்பூசலும் பெரிதாக்கப்பட்டிருந்தன. வழக்கம்போல் ஒரு தற்கொலை, இரண்டு கொலை, மூணு லாரி விபத்து. நாளிதழ் பத்திரிகையிலேயே பரபரப்பு இல்லை. வாரப்பத்திரிகையில் என்ன செய்தியைப் பரபரப்பாக்குவது என்று தெரியவில்லை.

டெலிபோன் மணியடிக்க எழுந்து போய் ரிஸீவரை எடுத்தான். 'கிரி ஹியர்' குரல் கொடுத்தான்.

"கிரி, நான்தான் பேசறேன். இப்பத்தான் எழுந்தியா?" அவனின் முதலாளி கார்வண்ணன் குரல்.

கார்வண்ணன் தடாலடியான ஆள். வணக்கம், குட்மார்னிங், வாழ்க, வளர்க, நன்றி இதெல்லாம் அவர் பேச்சில் இருக்காது. வார்த்தைகளைவிட செயல் முக்கியம். செயலைவிட செயலின் விளைவு முக்கியம். நாற்பது வயதில் ஆர்வம் காரணமாகப் பத்திரிகை ஆசிரியர் ஆனவர். இப்போது நாற்பத்திநாலு. ஆர்வம் பன்மடங்கு பெருகியிருக்கிறது. அரசியல் வாரப் பத்திரிகைக்கு முதலாளி என்பது கத்தி மேல் நடக்கும் காரியம். சர்க்கஸில் பார் விளையாடும் சாகஸம். கரணம் தப்பினால் மரணம். ஆடி விட்டுக் கீழிறங்க அத்தனை

பேரும் அதிசயித்துப் பாராட்ட அடுத்த ஆட்டத்திற்கு உடனே போகும் ஆர்வம் வரும். பாராட்டுதல்தான் பத்திரிகைக்குப் பெரிய டானிக். சர்க்குலேஷன்தான் சாப்பாடு. பத்திரிகையில் வந்த செய்தியை மக்கள் பேசிக் கொள்வதுதான் விளம்பரம். பதவி வெறி பிடித்தவர்கள் பத்திரிகை கண்டு பயப்படுவதுதான் உற்சாகம்.

இரண்டரை வருடத்தில் 'காலபைரவன்' பத்திரிகை தமிழ் மக்கள் இடத்தில் ஒரு இடம் பிடித்தது. அதற்கு கார்வண்ணன் ஒரு காரணம் 'வக்கீல் நோட்டீஸ் பத்திக் கவலைப்படாதே கிரி. போலீஸ் மிரட்டலுக்குப் பயப்படாதே. ரௌடி கும்பலுக்கு அஞ்சாதே. நமக்கு நியாயம்னு பட்டதை எழுதுவோம். நம்ம பத்திரிகை ஜெயிக்கும்.' ஐம்பதாயிரம் காப்பியை கால பைரவன் எட்டியபோது ஆறு பேருக்குத் தங்க மோதிரம் கொடுத்தார். மீதி பேருக்கு வெள்ளிக் கிண்ணம் கொடுத்தார். விழாவுக்கு வந்தவர்களுக்கு கேன்வாஸ் பை கொடுத்தார்.

"வண்டலூர் போயிட்டு வர ஆட்டோவா.. ஏன், சார் பஸ்ல போமாட்டீங்களோ.."

"சேலத்துப் பக்கம் மேஞ்ச புலியப் புடிச்சு கொண்டாந்தாங்க சார். எட்டுப் பேரை அடிச்ச புலி. ரெண்டு பேர் செத்துட்டாங்க. இங்கே வந்ததும் புலி செத்துப் போச்சு."

"ஏன்?"

"மயக்க மருந்து ஓவர்டோஸ். யார் தப்புன்னு விசாரிக்கப் போனேன். முழு விவரமும் எழுதிக் கொடுத்துட்டேன். புலி சாவறதைக் கண்ணால பார்த்தேன் சார்."

"அப்ப கவர் ஸ்டோரியா போட்டுரு."

நூத்திநாப்பது ரூபாய் ஆட்டோவுக்கு வவுச்சர் கையெழுத்தாகும். மாதச் சம்பளம் தவிர, கூட நூறு ரூபாய் அந்தக் கட்டுரைக்குத் தரப்படும். சட்டசபையில் காலபைரவனின் இந்தச் செய்தி கேள்வியாய் வரும்போது இன்னும் சந்தோஷம் வரும்.

"புலி மேட்டர் மாதிரி வேற எதுனா புடியா.."

தட்டிக் கொடுக்கப்படும். கார்வண்ணனுக்கு உண்மையாய் கடுமையாய் உழைக்கிறவர்களை மிகவும் பிடிக்கும்.

"கிரிதரு, செகப்பு பார்ட்டி நாப்பது டூரிஸ்ட் டாக்ஸி புக் பண்ணியிருக்குயா.. இன்னிக்கு நம்ப வீட்டாண்ட இருக்கற கார் டிரைவர் சொன்னான். உனக்கு எதுனா விளங்குதா?" கார்வண்ணன் குரல் உரக்கக் கேட்டது.

நாற்பது டூரிஸ்ட் டாக்ஸியா.. சிகப்பு பார்ட்டியா.. கிரிதரன் யோசனை செய்தான். தமிழகத்தில் இரண்டு வருடம் முன்பு மிகப்பெரிய அரசியல் மாற்றம் நிகழ்ந்தது. தேர்தலில் ஆளுங்கட்சி விழுந்து, எதிர்க்கட்சி ஆளுங்கட்சியாயிற்று. இரண்டு வருடங்களுக்கு முன்பு ஆண்டு கொண்டிருந்த ஆளுங்கட்சி எதிர்க்கட்சியாகி தங்களுக்குள்ளே அடித்துக் கொண்டது. போன ஆளுங்கட்சித் தலைவருக்குத் துணையாய் இருந்த பெண்மணி வெள்ளை அணியாகவும், அந்தத் தலைவருக்காகத் தியாகம் செய்தவர் சிகப்பு அணியாகவும் இருந்தார்கள். 'நானே முக்கியம், நானே முக்கியம்' என்று சண்டையிட்டுக் கொண்டார்கள். கட்சி இரண்டாகப் பிரிந்து, கூடி மறுபடி பிரிந்து ஏகப்பட்ட குழப்பம் விளைவித்தார்கள். இந்த முறை பிளவு உறுதி என்று சொன்னார்கள். நாங்கள்தான் வாரிசு என்று இருவரும் அறிவித்தார்கள். எதிர்க்கட்சியின் சிகப்பு வெள்ளை பிளவு இப்போதைய ஆளுங்கட்சிக்கு சந்தோஷம் தந்தாலும், சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட வேண்டிய கட்டாயம் அதற்கு இருந்தது. எனவே கவனமுடன் அவர்களைக் கண்காணித்து வந்தது. வெள்ளை அணியில் விரட்டப்பட்டவர்கள் சிகப்பு அணியில் சேர, வெள்ளை அணி, 'போனால் போகட்டும் போடா' என்று கட்சி அலுவலகத்தில் மும்முரமாய் இயங்கி வந்தது.

இப்போது யார் எதிர்க்கட்சி என்பது குழப்பம். எவர் பலம் வாய்ந்தவர் என்பது கேள்வி. எதிர்க்கட்சி சட்டமன்ற உறுப்பினர்கள் ஒவ்வொரு பேப்பருக்கும் செய்தி தர, எவர் எந்த அணி என்ற குழப்பம் வந்தது. இதுவரை இருந்த கட்சி அலுவலகத்தில் இருப்பவர்களே எதிர்க்கட்சி என்பதாய் மக்களுக்கு ஒரு எண்ணம் இருந்தது. அலுவலகத்தில் ஆட்சி செய்த வெள்ளை அணி சிகப்பைவிட ஒரு படி உயரமாய் இருந்தது. ஒரு வேளை சிகப்பு அணி வெள்ளை இருக்கிற அலுவலகத்தைப் பிடிக்க முற்படுகிறதோ.. தடேலென்று சூழ்ந்து கொண்டு நாங்கள்தான் என்று சொல்லப் போகிறதோ.

"என்னய்யா பேச்சையே காணம்." எதிர்முனையில்

கார்வண்ணன் பரபரத்தார்.

"சார், அட்டாக் பண்ணி கட்சி அலுவலகம் பிடிக்கப் போறாங்க."

"அதான்.. அதான் நானும் சொல்றேன்."

"ஆனா இப்படி செய்யறது தப்பு சார்."

"அரசியல்ல சரி, தப்பு உண்டா.. நீ என்னா பண்ணப் போற. அதச் சொல்லு.."

"நம்ம செல்லமுத்து என்கூடத்தான் சார் இருக்கான். நானும், அவனுமா நேர உங்க வீட்டுக்கு வர்றோம்."

"வா.. சீக்கிரம் வா, என்னமோ நடக்குதுன்னு உள்ள படுதுய்யா.." போன் துண்டித்தார்.

அரசியலில் பலப்பரீட்சை என்பது சில சமயம் உடல் ரீதியாக, அடிதடி ரீதியாக நடக்கும். எல்லா ஜனநாயக நாட்டிலும் இது சகஜம். இப்படியொரு நிர்ப்பந்தம் எல்லா அரசியல் கட்சிக்கும் ஏற்படும். வாய்மையே வெல்லும் என்று பெரியவர்கள் சொன்னாலும் வாய்மைக்குத் துணையாய் வலிமை போக வேண்டிய அவசியம் உண்டு. வில் எடுக்காமலும், கதை சுழற்றாமலும், கத்தி வீசாமலும் பாண்டவர்கள் நின்றிருந்தால் வாய்மை வென்றிருக்காது. அதேசமயம் வலிமையுள்ளதே வாய்மை என்பதாகவும் சொல்வதற்கு இல்லை. பொய்மையும், புரட்டும்கூட வலிமையைக் காட்டி ஜெயித்திருக்கின்றன. எது வாய்மை என்பது காலத்தால் அறியப்படும்.

சிகப்பு அணியில் இளைஞர்கள் அதிகம் இருந்தார்கள். வெள்ளை அணியினரைவிட பிராபல்ய உயரம் அதிகமில்லா விட்டாலும் துள்ளல் அதிகம் இருந்தது. துள்ளுவதே தங்கள் அணிக்கு விளம்பரம் என்கிற எண்ணமிருந்தது. துள்ளியாக வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. கட்சி அலுவலகம் யாரிடமிருக் கிறதோ அவர்களே சரியான எதிர்க்கட்சி. அரசியல் சட்ட ரீதியாய் இது சரியானதாக இல்லாவிட்டாலும் மக்கள் மனதில் இதன் மூலம் இடம் பிடிக்க முடியும். மக்கள் மனதில் சரியானபடி இடம் பிடித்துவிட்டால் அரசியல் சட்டம்கூட விலகி நிற்கும்.

அது தவிர, சிகப்பு அணிக்கு ஏதேனும் செய்து தன்னை நிலை நிறுத்திக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. வெள்ளை அணியின் அகம்பாவம் எரிச்சலூட்டியது. எதிர்ப்பில் வலிமை காட்டுகிறவனே

அரசியலில் உன்னதமானவன். இது ஜனநாயகமா. பண்பாடா என்று கேட்டால் கேட்டவனைப் பளீரென்று அறைவதை தவிர, வேறு வழியில்லை. எல்லா யுத்தமும் அநீதியானதுதான். எல்லா வெற்றிக்குப் பின்னாலும் பாபம் இருப்பது உண்மைதான்.

செல்லமுத்து விஷயம் கேட்டு, பிறகு போன் செய்து கொள்கிறேன் என்றான். வேகமாய் தலை துவட்டினான். இருவரும் அவசரமாய் உடுத்திக் கொண்டு இறங்கி னார்கள். கதவு பூட்டி ஆட்டோ பிடித்தார்கள். அவர்கள் ஆட்டோவில் ஏறும்போது கிரிதரன் வீட்டுக்குள் டெலி போன் மணியடித்தது. தஞ்சாவூர் தந்தி ஆபிசிலிருந்து வளர்மதி எதிர்முனையில் கிரிதரனுக்காகக் காத்திருந்தாள்.

'நான் மாட்டேன்னது தப்புதாம்ப்பா.. ராத்திரி ட்ரெய்ன்லயே மெட்ராஸ் வந்துறட்டுமா.' கேட்பதற் காக போன் செய்தாள். 'லோயர் பர்த் வாங்கிக் குடுத் திட்டீங்களேகண்டி, எனக்குத் தூக்கமே வரலை. நீங்க தூங்கனீங்களா'. கொஞ்சத் தயார் செய்து கொண்டாள். கிரிதரன் வீட்டில் டெலிபோன் எடுக்க யாருமில்லை.

வளர்மதி சோகத்துடன் டெலிபோன் தொடர்பைத் துண்டித்தாள்.

புருஷன் ஆசைக்குப் பணியாதது தவறோ.. நான் ரொம்ப திமிர் பிடிச்சவளாயிட்டேனோ. அம்மாகிட்ட என்னான்னு சொல்றது. சொன்னால் அவள் அப்பாவிடம் பட்ட சோகத்தை நாள் முழுக்கச் சொல்லுவாள். சொல்லிவிட்டு, 'எல்லா ஆம்பளையும் அப்படித்தான்.. நாமதான் வளைஞ்சு கொடுக்கணும்.. மறு வண்டியிலேயே ஊருக்குப் போ' என்பாள்.

வளர்மதிக்கு சென்னை திரும்ப விருப்பமும் இருந்தது. வெறுப்பும் இருந்தது. குழம்பினாள்.




"அட்டாக் பண்ண மாட்டாங்க சார். கட்சி அலுவல கத்தை அட்டாக் பண்ணா கெட்ட பேர் வந்திடும்." செல்ல முத்து மறுத்துப் பேசினான்.

கெட்ட பேருக்குப் பயப்படுகிறவனா அரசியல்வாதி. அரசியல்வாதி என்பதே கெட்ட பேராய்ப் போயிற்றே இப்போது. ஒரு கட்சி நாற்பது டூரிஸ்ட் டாக்ஸியை ஏன் கேட்கிறது. யாருக்காவது வரவேற்பா, ஊர்வலமா, பொதுக்கூட்டமா. எதுவுமேயில்லையே 'மக்களிடையே

எங்கள் கருத்துக்களைச் சொல்லி ஆதரவு திரட்டுவோம்' என்று சிகப்பு அணி நேற்றுகூட சொல்லிற்றே. ஒருவேளை மக்களிடம் இது கருத்து சொல்லும் முறையா, ஒருவேளை அட்டாக் பலிக்காவிட்டால் சிகப்பு அணியின் நிலமை என்ன.

கட்சி அலுவலகம் கைப்பற்றப்பட வேண்டும். அல்லது அந்த அலுவலகம் எனக்குமில்லை, உனக்குமில்லை என்று போக வேண்டும். கிரிதரன் நெஞ்சுக்குள் சிகப்பு விளக்கு எரிந்தது.

கரெக்ட், அலுவலகம் வைத்துக் கொண்டு ஒரு அடி உயரமாய் வெள்ளை அணி இருப்பதை சிகப்பு அணி விரும்பவில்லை. இருவரும் சமம் என்பதற்கு என்ன வழி. இப்போது இருக்கிற அலுவலகத்தை இரண்டு பேருக்குமே இல்லை என்று சொல்வதுதான் வழி. எதிர்க்கட்சி அலுவலகத்தில் கலவரம் நடந்தால் இப்போது இருக்கிற ஆளும்கட்சி அரசு என்ன செய்யும். கட்சி அலுவலகத்தை இழுத்துப் பூட்டும். சீல் வைக்கும். சந்தோஷப்படும்.

கிரிதரன் தீவிரமாய் யோசித்தான். ஆளும் கட்சிக்கு இதில் பங்கு உண்டோ என்று கணக்கு போட்டான். இது சேறு, ஆளும் கட்சி இதில் கை வைக்காது என்ற முடிவுக்கு வந்தான். ஆளும் கட்சியின் அலுவலகம் வழியாக ஆட்டோவைத் திருப்பச் சொன்னான். ஆளும் கட்சி அலுவலக வாசல் அமைதியாக இருந்தது. விசாரிக்க, பல அமைச்சர்கள் ஊருக்கு வெளியே இருப்பது தெரிந்தது. முதல்வர் தமிழகத்தின் தென் கோடியில் இருக்கிறார் என்பது புரிந்தது. ரகளை நடப்பது தெரிந்தால் முதல்வர் ஊர் விட்டுப்போக மாட்டார் என்ற எண்ணம் வந்தது. ஆளும் கட்சியின் பத்திரிகையாட்கள் கை குலுக்கி குசலம் விசாரித்தார் கள். "என்ன இங்க வந்து மோப்பம் புடிக்கிறீங்க." என்றார்கள். "பஸ் டிக்கெட் எடுத்துத் தாரேன். முதல்வர் இருக்கற ஊருக்குப் போய் விலாவாரியாக எழுதுங்க." கண் சிமிட்டினார்கள்.

"அதுக்குத்தான்யா உனக்கு சம்பளம். உஞ்சோத்தில் நா எதுக்கு மண்ணை அள்ளிப் போடணும்." கிரிதரன் பதில் சொல்லிவிட்டு ஆட்டோவில் ஏறினான். ஆளும் கட்சி இதில் சம்பந்தப் படவில்லை. இது எதிர்க்கட்சியின் போர். போர் நடக்குமா, இல்லை பிசுபிசுத்து விடுமா. தெரிய

வில்லை. ஆட்டோ கார்வண்ணனின் வீட்டுக்குத் திரும்பிற்று வாசலில் நின்றது.

"யோவ், வரும்போது ஆளுங்கட்சி அலுவலகத்துக் குள்ளே நுழைஞ்சிட்டு வரவேண்டியதுதானே." உள்ளே நுழைந்ததும் கார்வண்ணன் கத்தினார்.

"பார்த்திட்டோம், சத்தமேயில்ல.."

"அப்படியா." யோசித்தார். "அப்ப அட்டாக் நிச்சயம்."

"ஏன் அப்படி சொல்றீங்க."

"ஆளுங்கட்சி மறைமுகமா இதில் சம்பந்தப்பட்டாக் கூட வெள்ளைக்கட்சி அதை சாதகமா எடுத்துக்கும். பிரித்தாலும் சூழ்ச்சின்னு பேசும். ஜனங்க ஆதரவு வெள்ளைக் கட்சிக்கு வந்திடும். ஆளும்கட்சிக்கிட்ட சிகப்பு கட்சி ஆதரவு கேக்காம இருந்தாக்க, கலாட்டா நிச்சயம். ஆதரவு கேட்டிருந்தா வெள்ளைக் கட்சிக்கு இந்நேரம் விஷயம் லீக் ஆயிருக்கும். வீட்ல உட்கார்ந்து வெள்ளைக்கட்சி ஆளுங்களுக்கெல்லாம் போன் பண்ணினேன். எல்லோரும் தூங்கறாங்க."

"சிகப்புக் கட்சிக்காரங்க வீட்டுக்குப் போன் பண்ணினீங்களா."

"யாரும் வீட்ல இல்ல. எல்லோரும் அஞ்சு மணிக்கே எழுந்து வெளில போயிட்டாங்க. என்ன, நிறைய கார் கேட்டிருந்தீங்களாமேன்னு சிகப்பு கட்சித் தலைவரைக் கேட்டேன். ஒரு வேண்டுதலுக்குத் திருப்பதி போறாங்களாம். நாற்பது கார்லயான்னு கேட்டேன். சிரிச்சிட்டு வச்சிட்டாரு."

"அப்போ, அட்டாக்தான் நிச்சயம்."

"அப்போ என்ன செய்யலாம்."

"வெள்ளைக் கட்சி வாசலுக்கு எல்லோரும் போயி நிப்போம். நேரடி ரிப்போர்ட் தருவோம்."

"செல்லமுத்து, உள்ள போய் அக்காவைக் கேட்டு கேமராவ வாங்கிக்கோ. டிபன் சாப்பிட்டீங்களா." கார்வண்ணன் எழுந்து நின்றார்.

"இல்லீங்க." கிரிதரன் பதில் சொன்னான்.

"இந்தாம்மா, மூணு பேருக்கு தோசை வையி." உள்ளே குரல் கொடுத்துவிட்டு கார்வண்ணன் பாண்ட், சட்டையோடு வெளியே வந்தார்.

"அண்ணே, ஃபிலிம் இல்லண்ணே." செல்லமுத்து காமிராவைத் திறந்து பார்த்துவிட்டு கத்தினான்.

"போறபோது வாங்கிக்கலாம் தம்பி. அம்மா, ஒரு

மூவாயிரம் ரூபா எடு." மறுபடியும் உள்ளே பார்த்துக் கத்தினார். மெல்ல ஒரு பரபரப்பு அங்கே உருவாயிற்று.

"ஒண்ணு ஞாபகம் வச்சுக்க கிரி. இன்னிக்கு எதனா நடந்தது, நாளைக்கி பத்திரிகையில் அது வெளி வந்திடணும்." காலபைரவன் கடைக்கு வர, மூன்று நாள் இருந்தது. இன்றைய செய்தியை நாளையே தாங்கி ஒரு வாரப் பத்திரிகை வரவேண்டுமென்றால் இரவு முழுக்க கண் விழிக்க வேண்டும். இன்றைய செய்தி மகத்துவமாய் அமைந்தால் கண் விழிப்பது பற்றிக் கவலையில்லை. அமையுமா என்பது தான் கேள்வி.

"வீட்ல சொல்லிட்டு வந்துட்டியா. ராத்திரி வர்றதுக்கு லேட்டாகும்ன்னு."

"வளர்மதி தஞ்சாவூர் போயிருச்சு."

"தஞ்சாவூருக்கா, ஏன்."

"அவங்க அப்பாவுக்கு உடம்பு சரியில்லேன்னு ஊருக்குப் போயிருக்கு." மறுபடி பொய் சொன்னான்.

"நம்ம வீட்டுல ஏதோ பலகாரம் குடுத்தனுப்பணும் னாங்க. இந்தாம்மா, வளர்மதி ஊர்ல இல்லியாம்."

"என்ன சமாச்சாரம்.." உள்ளிருந்து கார்வண்ணன் மனைவி குரல் கொடுத்தாள். கிரிதரன் பேசாதிருந்தான்.

"வளர்மதி அப்பாவுக்கு ஏதோ உடம்பு சரியில்லை யாம். அதுக்காகப் போயிருக்காம்." கார்வண்ணன் குடிநீர் எடுத்து வர, தோசைகளை அவர் மனைவி பரிமாறினாள்.

"அப்ப சாப்பாடு எங்கே." அவள் பேச்சில் பரிவு கலந்திருந்தது.

"இன்னிக்கி எல்லோருக்கும் சாப்பாடு நம்ம வீட்லதான். மூணு, நாலு பேருக்குக் கூட வையி. வந்த பெறகு அடுப்பு மூட்டாத.." கை அலம்பி வாசலுக்கு வந்தார்கள்.

"கிரி, நீ ஸ்கூட்டர்ல வரலியா."

"இல்லீங்க இந்த மாதிரி சமாசாரத்துக்கு ஆட்டோல தான் போகணும்."

பத்திரிகைக்காரர்களுக்கு நகரத்து ஆட்டோக்காரர் கள் ஒரு மாதிரி தூரத்துச் சொந்தம். அந்த உணர்வோடு தான் பழகுவார்கள். பத்திரிகை சவாரி என்பது ஆட்டோக்காரர்களுக்கு போனஸ் போல. ஆட்டோ என்பது பத்திரிகைக்காரர்களுக்கு சொந்த வண்டி போல. சில ஆட்டோக்காரர் பத்திரிகைக்கு வாசகர்களாகவும் இருப்பார்கள். போலீசோடு அடிக்கடி முறைத்துக் கொள்ளும் ஆட்டோக்காரர்களுக்குப் பத்திரிகைக்காரர்

களின் நட்பு தேவைப்பட்டது.

போலீசிடம் அடி வாங்கி ரத்தம் கக்கிய பத்திரிகைக் காரனை ஆட்டோக்காரன் பத்திரமாய் ஆஸ்பத்திரி யிலும் சேர்த்திருக்கிறான். ஆட்டோக்காரன் தாக்கப் பட்டபோது போலீசின் அராஜகம் என்று பத்திரிகைக் காரன் வர்ணித்திருக்கிறான். கோர்ட்டில் ஏறி சாட்சி சொல்லியிருக்கிறான். பெண் கொடுத்துப் பெண் வாங்கின மாதிரியொரு உறவு அங்கே உண்டு. அது பேசப்படாத ஒரு உறவு. பெரிதாக்கப்படாத நட்பு.

"என்ன குப்புசாமி, இன்னிக்கி நீ மாட்டினியா.. இன்னிக்குக் கொஞ்சம் பேஜாரான வேலைம்மா." கார்வண்ணன் சந்தோஷமாய் குசலம் விசாரித்தார்.

"தூள் கௌப்பிடலாம் மொதலாளி, உட்காருங்க." குப்புசாமி சீட்டை பலமாக அடித்தான். தோள் துண்டினால் சீட்டைத் துடைத்தான்.

"பெட்ரோல் இருக்கா."

"மூணு லிட்டர் போட்ருக்கேன் மொதலாளி."

"போறும். அப்புறம் போட்டுக்கலாம். அம்மாடி, நா வரேன்." உள்ளே திரும்பிச் சொல்லி விட்டு ராயப் பேட்டைக்குப் போக உத்தரவு கொடுத்தார். வழியில் இரண்டு ரோல் ப்யூஜி ஃபிலிம் வாங்கிக் கொண்டார்கள். ஃபிலிம் ரோலின் அட்டைப் பெட்டியைத் தோளில் மாட்டியிருந்த கேன்வாஸ் பையில் பத்திரப்படுத்தி விட்டு, செல்லமுத்து ஓடுகிற ஆட்டோவிலேயே காமிராவுக்குள் லோட் செய்தான்.

"எங்கனா பிள்ளையார் கோயிலாண்ட நிறுத்தணுமா." குப்புசாமி திரும்பிக் கேட்டான்.

"ஏன் பிள்ளையார் கோயில்." கார்வண்ணனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"உங்க போட்டோக்கிராபர் மொதல் போட்டோவா தெருப்பிள்ளையாரத்தான் எடுப்பாரு."

"ஏண்டா, அப்படியா?"

"ஆமா."

"இப்படி எத்தினி போட்டோ எடுத்திருப்ப."

"நூற்றுக்கணக்கில் இருக்கும்.."

"நூத்துக் கணக்கிலா.. எவன் வூட்டுச் சொத்துன்னு நெனச்சீங்க. ஏதோ தொழில் தொடங்கின புதுசுல புள்ளையார போட்டோ எடுப்பாங்க. பிலிமுக்கு பிலிம் என்னடா புள்ளையார் போட்டோ."

"அப்படியொரு வழக்கமாயிருச்சு, மொதலாளி."

"ஊரான் வூட்டு நெய்யே, எம் பொண்டாட்டி கையே. அதில ஒரு போட்டோவாவது கண்ணுல காமிச்சிருக்கியா."

"புள்ளையார் கோயிலாண்ட நிறுத்தட்டுமா வேணாமா." குப்புசாமி கேட்டான்.

"முக்கியமான வேலைக்குப் போறோம். நிறுத்தாம போனா மனசு சங்கடப்படும். நிறுத்து. இதுதான் கடைசி. இத்தோட புள்ளையார் போட்டோ எடுத்துக்கிறத நிறுத்திடணும்." கார்வண்ணன் அதட்டலாய்ச் சொன்னார்.

கட்சி அலுவலகத்தின் முன்பக்க மணலில் காக்கைகள் உட்கார்ந்திருந்தன. இறந்து போன கட்சித் தலைவரின் ஆளுயரச் சிலையில் காய்ந்த மாலைகள் தொங்கிக் கொண்டிருந்தன. கட்சி அலுவலகத்திற்கு எதிர்ப்பக்கமுள்ள டீக்கடையில் எல்லோரும் இறங்கினார்கள். காத்திருந்தார்கள். கிரிதரன் மட்டும் அலுவலகத்திற்குள்ளே போனான். மணி எட்டு முப்பத்தைந்து. அப்போதுதான் கதவுகள் திறக்கப்பட்டு அறைகளைப் பெருக்கிக் கொண்டிருந்தார்கள்.

டெலிபோன் அடித்தது. ஆபீஸ் பையன் போன் எடுத்து 'ஹலோ' என்றான். "யாரும் வர்லீங்க. வாசல்ல கூட யாரும் இல்லீங்க. கால பைரவன் ரிப்போர்ட்டர் தான் வந்தாரு. உங்களைப் பார்த்து பேட்டி எடுக்கணும் னாரு. உக்கார வச்சிருக்கேன்." கூசாமல் பொய் பேசினான்.

கிரி யாரென்று கண்களால் வினவினான். போன் பொத்தி 'வயசாளி' என்றான் பையன்.

"அவரை கூப்பிடணுங்களா, கொஞ்சம் இருங்க." போனை மறைத்துக் கொண்டு காத்திருந்தான். ஒரு நிமிடம் பொறுத்து கிரியிடம் கொடுத்தான்.

"ஹலோ, கால பைரவன் ஆசிரியர் கிரி பேசறேன். வணக்கமய்யா."

"வணக்கம். வணக்கம். யாராவது வந்திருக்காங்களா."

"இல்லீங்களே.."

"வாசல்ல கூட்டம் ஏதாவது நிக்கிதா."

"நிக்கறா மாதிரி தெரியலீங்களே."

"தெருவில ஆளுங்க இருக்கா."

"ஜனம் போய் வந்துக்கிட்டிருக்கு. எதுக்குய்யா கேக்கறீங்க."

"ஒண்ணுமில்ல, ஒண்ணுமில்ல.. ஆமா தம்பி,

உங்ககூட போட்டோகிராபர் வந்திருக்காரா."

"இருக்காங்கய்யா."

"இருங்க அங்கேயே, வந்திடறேன்."

"எதுனா புதுசா நியூஸ் தர்றீங்களாய்யா."

"நா என்ன தர்றது. நியூஸ் தானா வரும். அங்கேயே இருங்க. வந்தர்றேன்." குரலில் பதட்டம் தெரிந்தது.

அருகே போய் வணக்கம் சொன்னாலும் எனக்கு எதுவும் தெரியாது என்று சொல்கிறவர், இத்தனை பதட்டமாய்ப் பேசுவானேன். கிரி வாசலுக்கு வந்தான்.

வெளியே மணல் வெளியில் கரை போட்ட வேட்டிகள் குழுமத் துவங்கின. அன்றைய நாளிதழைப் பிரித்துப் படிக்கத் துவங்கின. யாரோ ஒரு முதிய பெண்மணி கையில் மனுவோடு உட்கார்ந்திருந்தார். மணல் வெளி தாண்டி கிரிதரன் தெருவுக்கு வந்தான்.

எதிர்ப்பக்க நடைபாதைகளிலும் இப்போது ஆட்கள் இருந்தார்கள். உரத்த குரலில் அரசியல் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கார்வண்ணன் வேறு யாரோடோ தணித்த குரலில் பேசிக் கொண்டிருந்தார். செல்லமுத்து எதிர்வீட்டு மேல் மாடி ஏறி வெறிச்சோடியிருந்த கட்சி அலுவலகத்தை, தெருவில் நடமாடும் மனிதர்களோடு சேர்த்து ஒரு போட்டோ எடுத்தான்.

முற்றிலும் மூடப்பட்ட ஒரு டெம்போவிலிருந்து இரண்டு ஆட்கள் இறங்கி டீக்கு ஆர்டர் கொடுத்தனர். பிஸ்கட் பாட்டிலில் கை வைத்து பிஸ்கட் எடுத்துக் கொண்டார்கள். வந்து நின்ற பஸ்ஸிலிருந்து கட்சிக் கரை வேட்டிகள் இறங்கின. கார்வண்ணன் கிரியின் அருகே வந்து அவன் தோளில் கை வைத்து 'என்ன' என்று கேட்டார்.

"எங்கேயோ நெருப்பு இருக்கு அண்ணே, ஒரு புகை நாத்தம் வருது. ஆனா, வெடிக்குமான்னு தெரியல. புஸ்வாணமாவும் போயிரலாம்."

"வெடிக்கும்." கார்வண்ணன் உறுதியான குரலில் சொன்னார்.

"எப்படி."

"நாகர்கோவில் கன்யாகுமரி, தூத்துக்குடி, ராமேஸ்வரம் இங்கே இருந்தெல்லாம் கட்சி ஆளு வந்திருக்கு.."

எல்லாம் கடற்கரைப் பட்டினங்கள். கடற்கரைப் பட்டினத்திலிருந்து கட்சி ஆட்கள் வருவதென்றால்..

கிரிதரன் மனதில் கேள்வி எழுந்தது. உள்ளங்கையை மீன் மாதிரி வைத்து "இந்தக் குரூப்பா" என்று கேட்டான்.

'ஆம்' என்று கார்வண்ணன் தலை அசைத்தார்.

மீனவர்கள் என்பது இரண்டு பேருக்குமே புரிந்து போயிற்று. எந்தக் காரணமுமின்றி இவர்கள் கட்சிக்காக சென்னைக்கு வரவேண்டுமென்றால் ஏதோ விசேஷம் நிச்சயம் இருக்கிறது.

"ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு. ரெண்டும் ரெண்டும் நாலு. ஏன் முழிக்கிற கிரிதரா."

"இப்பவும் முழுசா நம்ப முடியலை சார். நம்பாம இருக்கவும் முடியலை.. மீனவர்கள் ஏதாவது கோரிக்கை கொண்டு வந்திருக்கலாம். அதுபற்றி கட்சியில் பேச்சு இருக்கலாம்."

அப்படியும் இருக்கக்கூடும் என்று கார்வண்ண னுக்கும் தோன்றிற்று.

"வெய்ட் பண்ணலான்றியா. வேணான்றியா."

"அடடே.. நிச்சயமா வெய்ட் பண்ணலாம். புஸ்வாணமா இருந்தாலும் அத போட்டோ எடுத்துக்கிட்டுப் போகணும்."

செல்லமுத்து டெம்போவில் முன் கதவு திறந்து ஏற முற்பட, டீ குடித்துக் கொண்டிருந்தவர்கள் எகிறிக் கொண்டு வந்தார்கள்.

"ஏய்யா கதவைத் திறக்கற."

"பத்திரிகை போட்டோகிராபருங்க."

"யாராயிருந்தா எங்களுக்கென்ன, நீ ஏன் கதவைத் திறக்கற."

"டெம்போல ஏறி கட்சி பில்டிங்க ஒரு போட்டோ எடுக்கணுங்க."

"எந்தப் பத்திரிகை."

"கால பைரவன்க."

"அப்ப ஏறு, சொல்லிட்டு செய்யறதால." அவர்கள் கதவு பிடித்துக் கொள்ள, செல்லமுத்து கால் வைத்து டெம்போவின் உச்சியில் ஏறினான். மினோல்டாவில் ஒன்றும், நிகானில் ஒன்றும் போட்டோ எடுத்துக் கொண்டான். கதவு பிடித்துக் கொண்டிருந்தவர்கள் மிச்சமிருந்த டீயைக் குடிக்கப் போனார்கள். காமிராக்களை மூடி, கவனமாய் கதவில் கால் வைத்து கீழிறங்கியவன் டிரைவர் சீட்டுக்குப் பின் பக்கமிருந்த ஜன்னல் வழியே உள்ளே கிடந்த பொருளை

எதேச்சையாய் கவனித்தான். உள்ளே கை நீள சவுக்குக் கட்டைகள் இருந்தன. டிரைவர் சீட் காலடியில் சைக்கிள் செயின் இருந்தது.

கண்ணாடி உயர்த்தும் கம்பில் திருக்கைவால் சுற்றப்பட்டிருந்தது. ஒரு கணம் அவன் முகத்தில் பயம் படர்ந்தது. இறங்கி கார்வண்ணனுக்கு அருகே வந்தான்.

"முதலாளி, டெம்போல அடிதடி சமாச்சாரம் இருக்கு. காதோடு காதாய் விவரித்தான். அவன் பேசியது கிரிக்கும் கேட்டது. மூவரும் ஒருவரை ஒருவர் நம்பிக்கையோடு பார்த்துக் கொண்டார்கள்."

"செல்லமுத்து, நீ உள்ளே போய் இரு. என்ன நடந்தாலும் எடு. நாங்க இங்கேயே இருக்கோம். யார் தடுத்தாலும் பயப்படாத, போட்டோ எடு. நா இருக்கேன் குப்புசாமி, நீ வண்டிய விட்டு எங்கயும் போகக்கூடாது. எத்தினி நேரம் ஆனாலும் ஒண்ணுக்கு ரெண்டுக்குக் கூடப் போகக்கூடாது."

"போகமாட்டேன் முதலாளி." குப்புசாமி வாக்குறுதி கொடுத்தான். வண்டியை ஒரு தடவை ஸ்டார்ட் செய்து ஆஃப் செய்தான்.

அந்தத் தெருவின் மூலையில் ஒரு வக்கீல் வீடு இருந்தது. வக்கீல் வீட்டு முனையிலிருந்து இரண்டு வெள்ளை போலீஸ் லாரிகள் திரும்பின. பின்னால் ஒரு மண் லாரி வந்தது. மண் லாரியிலும் ஒரு செக்ஷன் போலீஸ் இருந்தது. கிரிதரன் லாரி நம்பர்களைக் குறித்துக் கொண்டான். மணி ஒன்பதேகால். கடைசியாய் வந்த ஜீப்பிலிருந்து அதிகாரி உத்தரவிட, வேனிலும், லாரியிலும் இருந்த போலீஸ்காரர்கள் கீழே குதித்தார்கள். இரும்புத் தொப்பிகளை அணிந்து கொண்டார்கள்.

வெள்ளை நிற ஸ்டாண்டர்ட் வேன் திரும்ப, அதிலிருந்து துப்பாக்கிப் போலீசார் குதித்தார்கள். ஸ்டென் கன்னும், தோளில் மரப்பெட்டியும் வைத்திருந்தார்கள்.

சிலர் பஸுக்கா மாதிரி பெரிய வாயுள்ள ஒரு முழத் துப்பாக்கிகளை வைத்திருந்தார்கள். சிகப்புக் கொடியோடு கீழே இறங்கினார்கள். இது டியர் க்யாஸ் ஸ்க்வாட்.

போலீஸ் குவியல் பார்த்துப் பொது மக்கள் பீதியோடு நகர்ந்தார்கள். மோட்டார் சைக்கிளில் வந்த சார்ஜெண்ட்கள் தெரு முனைகளில் நின்று கொண்டார்கள். கட்சிக்கரை வேட்டிகள் கட்டிடத்திற்குள்

நுழைந்தன. இரண்டு அம்பாஸ்டர்களில் வெள்ளை அணியின் மூத்த தலைவர்கள் உள்ளே நுழைந்தார்கள். போலீஸ், கட்சி சுவரை ஒட்டி நிறுத்தப்பட்டது. எதிர்ப் பக்க முட்டுச் சந்தில் ஒரு செக்ஷன் நிறுத்தப்பட்டது.

சென்ட்ரல் ரிஸர்வ் போலீசார் கட்சி அலுவலகத்தின் மணல் திடலில் நுழைந்தார்கள். ஒரு ஓரமாய் நின்று கொண்டார்கள். செல்லமுத்து அலுவலகத்தின் வராண்டாவில் ஏறி தலைவர்களின் வரவைப் போட்டோ எடுத்தான். கீழ் ஹாலில் எல்லோரும் குழுமி இருக்க, கிரிதரன் உள்ளே போனான்.

கட்சியின் வயசாளிக்கு வணக்கம் சொன்னான்.

"அப்பறம் வாங்க.." அவர் பதட்டமாய் அவனை வெளியே தள்ளினார். கிரிதரனும், செல்லமுத்துவும் மணல் திடலைக் கடந்து வாசலுக்கு வந்தார்கள்.

பெரிய விசில் சத்தம் கேட்டது. டிராஃபிக் சார்ஜண்ட் அந்த வழியே வந்த பஸ்களை வேறுபக்கம் திருப்பினார். நின்று வேடிக்கை பார்த்த பொதுமக்களை போலீசார் விரட்டினார்கள். பஸ் ஸ்டாண்டில் நின்ற பொது மக்களை பஸ் வராது என்று எச்சரித்தார்கள். தெருவின் இன்னொரு முனையில் சலசலப்பு கேட்டது. அங்கேயும் பஸ்கள் திருப்பி விடப்பட்டன. தொலைவில் நிறைய கார்கள் வருவது தெரிந்தது. நிறைய ஆட்டோக்கள் காரை உரசியபடி வந்தன.

கட்சி அலுவலக வாசலில் முதல் கார் நிற்க, மற்ற கார்கள் மடமடவென்று பின்னால் நின்றன. மணி ஒன்பது இருபது.

காரிலிருந்து வெள்ளைக் கட்சி மூத்த தலைவர்கள் இறங்கினார்கள். 'வாழ்க' என்கிற கோஷம் வானைப் பிளந்தது. டீக்கடையின் கதவுகள் சரசரவென்று மூடப்பட்டன. பின்னாலிருந்த கார்களில் இறங்கிய தொண்டர்கள் முன்னே ஓடி வந்தார்கள்.

செல்லமுத்து போலீஸ் வரிசையைத் தாண்டி மணல் திடலுக்குள் ஓடினான். அங்கிருந்த பிளாஸ்டிக் வாட்டர் டாங்க்கில் ஏறிக் கொண்டான். மினோல்ட்டாவையும், நிகானையும் திறந்து காத்திருந்தான்.

கிரிதரன் வெள்ளை அணித் தலைவருக்கு வணக்கம் சொல்ல..

"ஒரு பத்து நிமிஷம் தள்ளி நின்னுக்க தம்பி, அப்புறம் பேட்டி தரேன்." ஒருவர் விரல் சொடுக்கினார்.

'வெள்ளை அணி ஒழிக' என்றபடி சிகப்பு அணி உள்ளே நுழைந்தது. 'சிகப்பு அணி ஒழிக' என்று வெள்ளை அணி தடுத்து நிறுத்தியது. வயசாளி இரண்டு கைகளையும் விரித்து வராண்டாவிற்கு வந்தார். உள்ளே நுழைய முயன்ற சிகப்பு அணித் தலைவர்களைத் தடுத்தார். அவர் நெஞ்சில் பலமாய் ஒரு குத்து விழுந்தது. 'ஐயோ' என்று சுருண்டு விழுந்தார்.

செல்லமுத்து மினோல்ட்டாவை இயக்கினான்.

தடுத்த வெள்ளை அணிக்கு தர்ம அடி சரமாரியாய் விழுந்தது.

சிகப்பு அணித் தலைவர் ஒருவரை வெள்ளை அணிக்காரன் தள்ளிவிட்டான்.

செல்லமுத்து மினோல்ட்டாவை இயக்கினான்.

யாரோ ஒருவன் சவுக்குக்கட்டை எடுத்து வெள்ளை அணித் தொண்டனின் முதுகில் அடித்தான். சிகப்பு அணித்தலைவர்கள் மீது மணல் வீசப்பட்டது.

செல்லமுத்து மினோல்ட்டாவை இயக்கினான்.

வெள்ளை அணி பின் வாங்கி கதவு சாத்த முயல, சிகப்பு அணி உள்ளே புகுந்து வெள்ளை அணியை வெளியே இழுத்துப் போட்டது. வெள்ளை அணித் தலைவரின் வேட்டியை உருவி வீசியது. பொத்து பொத்தென்று பலரும் அடித்துக் கொண்டார்கள்.

செல்லமுத்து மின்னோல்ட்டாவைப் பல முறை இயக்கினான்.

யாருக்கோ மண்டை உடைந்து ரத்தம் வந்தது. யாரோ பெருங்குரலெடுத்து அழத் துவங்கினார்கள். வெட்டு, குத்து, கொல்லு என்று பல திசைகளிலும் குரல்கள் கேட்டன.

முட்டுச் சந்தில் நின்றிருந்த போலீசார் உள்ளே வந்தார்கள்.

செல்லமுத்து மின்னோல்ட்டாவை விடாது இயக்கினான்.

போகஸ் செய்யக்கூட நேரமின்றி எல்லாச் சம்பவங்களையும் கண்ணுக்குத் தெரிந்த விதமாய் போட்டோ எடுத்தான்.

போலீஸ் உள்ளே புகுந்து சிகப்பு அணியை வெளியே இழுத்தது. உயர் அதிகாரிகள் வெள்ளை அணிக்குக் காவலாய் நின்றார்கள். மோதிய சிகப்பு அணிக்காரர்களைத் தடுத்து நிறுத்தினார்கள்.

"இது எங்க கட்சி அலுவலகம். நீ யார்

தடுக்கறதுக்கு." எகிறி முறைத்த சிகப்பு அணித் தலைவர்களை போலீசார் சமாதானப்படுத்தினார்கள். 'நிலைமை மோசமானால் நடவடிக்கை எடுக்க வேண்டி வரும்' என்று எச்சரித்தார்கள்.

"உன் நடவடிக்கையை எடு. என் நடவடிக்கையை நான் எடுக்கிறேன்." சிகப்பு அணித் தலைவர் வேட்டி மடித்துக் கொண்டு கத்த, உயர் போலீஸ் அதிகாரி பின்னுக்குத் தள்ளப்பட்டார்.

போலீஸ் அதிகாரி தொப்பியைச் சரி செய்து கொண்டு வெளியே வந்தார். வயர்லெஸில் பேசினார்.

செல்லமுத்து இடைவிடாது மினோல்ட்டாவை இயக்கினான்.

"சார்ஜ்.." என்று சத்தம் கேட்டது. சென்ட்ரல் போலீஸ் ஹரியானா செக்ஷன் இடுப்பு உயரத் தடியை உயர்த்தி நின்றது.

முதல் வரிசை போலீஸ் பதினைந்து பேர் முன்னேறி, எதிரே இருந்தவர்களை சரமாரியாய் விளாசத் துவங்கினார்கள்.




வலியும், அவமானமும் மனிதர்களைத் தாக்கும் வேகம் மிக விசித்திரமானது. எது இவைகளுக்குக் காரணமாய் இருந்ததோ, அதனின்று விலகிவிட உடனே தோன்றும். தான் வஞ்சிக்கப்பட்டு விட்டதாக ஒரு துக்கம் எழும். தன்னை எதிர்த்து உலகமே சதி செய்கிறது என்று தோன்றும். வலியை சாதாரணமாய் ஏற்றுக் கொள்ள, அவமானம் தாங்க பழக்கம் வேண்டும். தனியே ஒரு பக்குவம் வேண்டும்.

அப்படி பக்குவப்பட்டவருக்கு அரசியல் எளிது. இது இங்கு மட்டுமல்ல. எல்லா தேசங்களுக்கும் உண்டான அரசியல் விதி. ஆரம்பப்பாடம்.

உயர் அதிகாரி செல்லமுத்துவை நோக்கி போலீசிற்கு கை காட்ட, இரண்டு சென்ட்ரல் போலீஸ் ஜவான்கள் கீழிருந்தபடியே டாங்க்கில் நிற்கும் செல்லமுத்துவின் கால்களை பலமாகத் தாக்கினார்கள். செல்லமுத்து கீழே விழுந்தான். காமிரா ஒரு இன்ஸ்பெக்டருக்கு மாறிற்று.

போலீஸ் எல்லாத் தலைவர்களையும் கைது

செய்தது. சிகப்பு அணித் தலைவர்களைத் தனியே வேனில் ஏற்றியது. தெருவில் நின்றவர்களும் விரட்டப்பட்டார்கள். கார்வண்ணன் ஓடி வந்து செல்லமுத்துவின் தோளைப்பிடிக்க, மூவரும் ஆட்டோவில் ஏறினார்கள். மறுபடியும் மூன்று லாரி போலீஸ் இறங்கு முன்பு குப்புசாமி நேராகக் கடற்கரை நோக்கி ஓட்டினான். கார்வண்ணனுக்கும், கிரிதரனுக்கும் நடுவே இருந்த செல்லமுத்துவைத் திரும்பிப் பார்த்தான். பழமண்டியைத் தாண்டி இருந்த டாக்டர் வீட்டு வாசலில் வண்டியை நிறுத்தினான்.

கிரிதரனும், கார்வண்ணனும் பேச முடியாத துக்கத்தில் இருந்தார்கள். மெல்ல செல்லமுத்துவை டாக்டர் வீட்டு பெஞ்சில் உட்கார வைத்தார்கள். டாக்டர் சங்கரன் என்று எழுதப்பட்ட கதவைத் தள்ளி உள்ளே போனார்கள்.

ஒல்லியாய், உயரமாய் இருந்த டாக்டர் வெளியே வந்தார். செல்லமுத்துவின் சட்டையைக் கழற்றிக் காயங்களைப் பரிசோதித்தார். இரண்டு விரல் அகலத் திற்குப் பட்டையாய் முதுகில் சிவந்து போயிருந்தது. அந்த அடிதான் பலமானது. முகவாய்க்கும், கழுத்துக் கும், முதுகுக்கும் களிம்பு தடவப்பட்டது. எல்லா இடங்களையும் பரிசோதனை செய்துவிட்டு எலும்பு முறிவு இல்லை என்று டாக்டர் ஊர்ஜிதப்படுத்தினார். ஊசி போட்டார். மருந்து கொடுத்தார்.

சகலரும் வண்டியில் ஏறி பீச் ரோடு ஓட்டலுக்குப் போனார்கள். டீக்கு ஆர்டர் கொடுத்தார்கள்.

"அற்புதமான கேமரா போயிடுச்சே முதலாளி.." செல்லமுத்து, கண்ணில் ஜலம் தளும்பப் பேசினான்.

"போகட்டும் போ. உயிரோட வெளியே வந்தியே அதே பெரிசு போ. ஒரு விஷயம் சந்தோஷம். வேற எந்தப் பத்திரிகைக்காரனும் பார்க்கவில்லை. படா படா ஆளுங்க கூட இது நடக்கும்னு எதிர்பார்க்கவில்லை. நம்ம கணக்கு சரி. ஒண்ணாம் நம்பர் கட்டுரை எழுதலாம். ஆனா, ஒரு போட்டோ கூட நமக்குக் கிடைக்கலையே, அதுதான் வருத்தம்."

"ஒரு போட்டோ, பத்து கட்டுரைக்குச் சமம்.." கிரிதரன் குறுக்கிட்டுப் பேசினான்.

"ஆனா கிடைக்கலையே." கார்வண்ணன் ஏக்கமாய் விட்டம் பார்த்தார்.

"போட்டோ எடுக்கக்கூடாதுன்னு சொல்றதுக்கு

அவன் யாரு. ஏன் கேமராவைப் புடுங்கினான்."

"அந்த ஆள் டி.ஐ.ஜி. சார். சென்ட்ரல் போலீஸ். நம்மைத் தடுக்கறதுக்கு அவனுக்கு எந்த உரிமையும் இல்ல.."

"தமிழ்நாடு போலீஸ் வச்சு ட்ரை பண்ணிப் பார்ப்போமா."

"சிகப்பு அணித் தலைவர் ஒண்ணு விடாம போட்டோ எடுன்னு கத்தினாருண்ணே. அந்த வெறுப்புலதான் என்ன அடிச்சிட்டான்."

"சிகப்பு அணித் தலைவர் மூலமா ட்ரைப் பண்ணிப் பார்ப்போமா."

"இப்போ கேமரா எங்கயிருக்கு."

"தமிழ்நாடு சப்-இன்ஸ்பெக்டர்கிட்ட இருக்குண்ணே. இவன் புடுங்கி அவர்கிட்ட கொடுத்திட்டான். ஏன் கொடுத்தான்னு தெரியல."

"போட்டோ எடுத்தத தடுத்துட்டேன். மிச்சம் உம்பாடு, உம் பாலிடிக்ஸுன்னு கொடுத்திட்டானோ என்னமோ."

"உக்காந்திருந்தா ஆகாது. எதுனா செய்யணும். யோவ், சீக்கிரம் டீ கொண்டா." கார்வண்ணன் முகத்தில் மறுபடியும் சுறுசுறுப்பு வந்தது. டீ குடித்துவிட்டு ஆட்டோவில் ஏறினார்கள்.

"எங்க போறது." குப்புசாமி கேட்டான்.

கிரி சற்று யோசித்துவிட்டு "ஜெனரல் ஆஸ்பத்திரி போ. அங்கதான் சிகப்பு அணித் தலைவர்கள் இருப்பாங்க."

"கிரி, ஒட்டு மொத்தமால்லாம் போனா வேல ஆவாது. செல்லமுத்து, நீ எங்க கூட வா. நாம வேற ஆட்டோ புடிச்சு கமிஷனர் ஆபீஸ் போவோம்." இன்னொரு ஆட்டோவிற்கு கை நீட்டினார். இரண்டு ஆட்டோக்களும் வெவ்வேறு திக்கில் பிரிந்தன.

கார்வண்ணன் வீட்டில் போன் அடித்தது.

"நா, வளர்மதி பேசறேன். தஞ்சாவூர்லேர்ந்து பேசறேன். எங்க வீட்டுக்காரர் இருக்காரா."

"இல்லியம்மா. எங்க வீட்டு ஆளோட காலையிலேயே கிளம்பிட்டாங்களே. ஒங்கப்பாவுக்கு எப்படியிருக்கு. எதுனா அவசரமா." கார்வண்ணன் மனைவி பதில் கொடுத்தாள்.

"எங்கப்பாவுக்கு ஒண்ணும் சீரியஸ் இல்ல அக்கா. அவரு வந்தா நா மெட்ராஸுக்குத் திரும்பி

வரட்டுமான்னு கேக்கிறீங்களா."

"வேல முடிஞ்சட்டுதுன்னா வர வேண்டியதுதானே வளர்மதி."

"இல்லீங்க, அவர்கிட்ட கேக்கணும்."

"ஏன்."

"எனக்கும், அவருக்கும் சண்டை. கேட்டு வைக்கிறீங்களா, நான் சாயங்காலம் போன் பண்றேன்." போன் துண்டிக்கப்பட்டது.

"வா, கிரி. போட்டோல்லாம் கொண்டாந்தி ருக்கியா." ஆஸ்பத்திரியில் உள்ள சிகப்பணித் தலைவர்கள் உற்சாகமாய் வரவேற்றனர். நிறையப் பேருக்குப் பிரம்படி காயங்கள் இருந்தன. அது பற்றி அவர்கள் கவலைப்படவே இல்லை, கட்சி அலுவலகம் பூட்டப்பட்டதே பெரிய விஷயமாய் இருந்தது.

"யார் பூட்டினார்கள்." கிரி கேட்டான்.

"எங்களுக்கு தெரியாதுப்பா. போலீசைக் கேளு." சிரிப்பாய் பதில் சொன்னார்கள். காயங்களைப் பெருமையாய்க் காட்டினார்கள்.

கட்சி அலுவலகம் பூட்டப்பட்டதைப் பெரிய வெற்றி என்று கருதினார்கள். கிரிதரன் எல்லோர் காயங்களையும் பொறுமையாகப் பார்த்தான். அவர்கள் வெற்றிக் களிப்பான பேச்சை ஆஃப் தி ரெக்கார்ட், ஆன் தி ரெக்கார்ட் என்று பிரித்துப் பதிந்து கொண்டான்.

"போட்டோ எப்ப வரும்ப்பா." மறுபடியும் ஒரு தலைவர் கேட்டார்.

"போட்டோகிராபரை அடிச்சு நொறுக்கிட் டாண்ணே. ரெண்டு காமிராவையும் புடுங்கிட்டான்."

"ஏன்."

"தெரியலண்ணே."

"யார்கிட்ட காமிரா இருக்கு."

"நம்ம தமிழ்நாடு போலீஸ்கிட்டண்ணே."

"ஆள் யாருன்னு விசாரி. பேசிப் பார்ப்போம். இதப் போட்டோ எடுக்கறதில் என்ன தப்பு. கமிஷனர் கிட்ட பேசினியா."

"இல்லண்ணே.. மொதலாளி கார்வண்ணன் நேரா போயிருக்காரு."

அறை வாயிலில் நிழலாடிற்று. கார்வண்ணன் பரபரப்போடு நுழைந்தார். அண்ணனுக்கு வணக்கம் சொன்னார்.

"கிரி. காமிரா பத்திரமா உதவி கமிஷனர்

ரத்னசபாபதிகிட்ட இருக்கு."

"ரத்னசபாபதியா, அவரு நம்ம ஆளாச்சே. ரெண்டு ப்ரமோஷன் நான்தான் வாங்கிக் குடுத்தேன். ஏய், ஏஸிக்குப் போன் போடு. நா பேசறேன்னு சொல்லு.."

ஐந்து நிமிடத்தில் தொடர்பு கொள்ளப்பட்டது.

உதவி கமிஷனர் தன் அலுவலகத்தில் இல்லை. எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை.

"ஒண்ணு செய். நம்ம எடுபுடிய கூட்டிட்டுப் போ. இவன ஏ.ஸிக்குத் தெரியும். டேய், நா சொன்னன்னு காமிராவைக் குடுக்கச் சொல்லுடா." எடுபிடிக்கு சிகப்பு அணித்தலைவர் உத்தரவு கொடுத்தார். எடுபிடியோடு ஆஸ்பத்திரியை விட்டு ஓடி வந்தார்கள். ஆட்டோவில் ஏறினார்கள். ஏ.ஸி. எங்கே என்று கமிஷனர் ஆபீசில் ரகசியமாய் விசாரித்தார்கள்.

வெள்ளை அணித் தலைவர் வீட்டுக்குக் காவலாய் இருப்பது தெரிந்து, அங்கேயும் ஓடினார்கள். அங்கு ஏ.ஸி.யைச் சந்தித்து விபரம் சொன்னார்கள்.

"காமிரா வேணும். அவ்வளவுதானே, தரேன். ஆனா, ஃபிலிம் தரமுடியாது. பெரிய அதிகாரிகிட்ட பேசிட்டுத் தான் தர முடியும். இந்தாப்பா, காமிரா எடுத்தா."

"வேதனையில் மூச்சு நின்று போயிற்று."

வெறும் காமிரா எதற்கு. ஃபிலிமல்லவா சொத்து இப்போது, மன்றாடிக் கேட்ட போதும் மறுத்துவிட்டார். மினோல்ட்டாவைத் திறக்க முயற்சித்தார். செல்லமுத்து குறுக்கே பாய்ந்தான்.

"சார், அது மினோல்ட்டா."

"என்ன அதனால.."

"இப்படி தெருவில் வச்சுத் திறக்க முடியாது. ஸ்டுடியோல டார்க் ரூமிலதான் கழட்டணும். எங்களுக்குத் தெரிஞ்ச ஸ்டூடியோ இருக்கு. அங்கதான் கழட்ட முடியும். இந்த நாலு ஸ்க்ரூவும் வெளிய எடுக்கணும்."

மகத்தான பொய் ஒன்றைச் சொன்னான். முகம் திருப்பி லேசாய் கண் சிமிட்டினான்.

"குழந்தைவேலு, இங்க வாங்க.." உதவி கமிஷனர் அருகிலிருந்த இன்ஸ்பெக்டரைக் கூப்பிட்டார்.

"இந்தக் காமிராவ ஸ்டூடியோலதான் கழட்டணுமாம். கழட்டி ஃபிலிம் ரோல வாங்கிட்டு வாங்க.. காமிராவைக் குடுத்திடுங்க.. ஜாக்கிரதை.. கொஞ்சம் ஏமாந்தீங் கன்னா நாமம் போட்ருவாங்க. ஃபிலிம் ரோல் ரொம்ப முக்கியம். கோட்டை விட்டீங்க, உங்க வேலை போயி

டும். இவருகூட நம் ஜீப்புல போங்க. போய்க் காமிராவ வாங்கிக்குங்க."

எடுபிடி திரும்பிப் போக, கிரி, செல்லமுத்து, கார் வண்ணன் ஜீப்பில் ஏற, குப்புசாமி ஆட்டோ ஓட்டியபடி ஜீப்பைத் தொடர்ந்தான். மீட்டர் அறுபது காட்டியது.

மினோல்ட்டா செல்லமுத்துவின் மடியில் இருந்தது. கார்வண்ணன் செல்லமுத்துவைப் பார்த்துக் கண் சிமிட்டினார். செல்லமுத்து மினோல்ட்டாவை வைண்ட் செய்ய ஆரம்பித்தான். இருபத்தாறு படங்கள் போக, எடுக்கப்படாத ஃபிலிமையும் ஒரே பக்கம் கொண்டு வந்தான். கடைசி ஃப்ரேமை ரிலீஸ் செய்ய பட்டனை அழுத்தினான். 'க்ளாக்.. க்ளக்' மினோல்ட்டா சத்தமிட்டது. இன்ஸ்பெக்டர் திரும்பிப் பார்த்தார்.

"நம்ம கிட்டியே ராங் காட்றீங்களா. இந்த வேலைதான் வேண்டாங்கறது. எந்த ஸ்டூடியோ, இடம் சொல்லு." காமிராவைப் பிடுங்கி மடியில் வைத்துக் கொண்டார். செல்லமுத்து மைலாப்பூரில் ஒரு போட்டோ ஸ்டுடியோ சொல்ல, பூட்டியிருந்தது. இன்னொரு போட்டோ ஸ்டுடியோ சொல்ல அதுவும் பூட்டப்பட்டிருந்தது. வேறு போட்டோ ஸ்டுடியோ சொல்ல அங்கு ஆள் இல்லை.

"என்னய்யா, பூட்டின ஸ்டுடியோவா.. விலாசம் சொல்றீங்க. டிரைவர், மவுண்ட்ரோடு போ." ஒரு மணி நேர அலையலுக்குப் பிறகு, ஜீப் மவுண்ட் ரோடு போயிற்று. பெரிய ஸ்டுடியோ வாசலில் நின்றது. சகலரும் இறங்கினார்கள்.

"மினோல்ட்டாதானே, ஈஸியா கழட்டலாமே." முப்பது செகண்டில் அந்த ஸ்டுடியோ ஆள் ஃபிலிமைத் தனியே எடுத்து இன்ஸ்பெக்டரிடம் கொடுத்தான்.

"திருட்டுப் பசங்கய்யா நீங்க. இதுக்கா ஒரு மணி நேரம் அலைய விட்டீங்க.. ஏ.சி.கிட்ட சொல்லுறேன் வாங்க.." காமிராவை செல்லமுத்துவிடம் எறிந்தார். ஃபிலிமைப் பாக்கெட்டிற்குள் போட்டுக் கொண்டார். ஜீப்புக்கு நகர்ந்தார்.

தோல்வி, கண்ணெதிரே தெளிவாய்த் தெரிந்தது. ஜீப்பில் ஏறிய இன்ஸ்பெக்டரை இழுத்து, ஃபிலிமைத் திருடிக் கொண்டு ஓடி விடலாமா என்று தோன்றியது. கோபத்தில் அதிகம் பசித்தது.

குப்புசாமியின் ஆட்டோவில் ஏறி புகாரிக்குப்

போனார்கள். கைக்கெட்டியது வாய்க்கு எட்ட வில்லையே என்கிற வருத்தத்தோடு சாப்பிட்டார்கள்.

"சார், ஒரு ஐடியா.. கமிஷனர்கிட்ட போவோம். ஃபிலிமைக் கழுவச் சொல்லிப் பார்ப்போம். எது எது போலீசாருக்குப் பிடிக்கவில்லையோ, அவைகளை எடுத்துக் கொள்ளட்டும். பத்திரிகையில் போடலாம் என்கிற ஃபிலிமை மட்டும் தரட்டும்."

"கழுவிப் பார்த்திட்டு எதுவும் நாம போட முடியாதுன்னு சொல்லிட்டா.."

"தலையெழுத்து.. வெறும் கட்டுரை மட்டும் எழுதுவோம்."

"ஒரு போட்டோ, பத்து கட்டுரைக்குச் சமம். ட்ரை பண்ணிப் பார்க்கலாம்."

சாப்பிட்டு சிகரெட் பிடித்தபடி கமிஷனர் ஆபீசிற்குப் போனார்கள். கமிஷனர் ஆபீசில் சிகப்பு அணியின் கூட்டம் இருந்தது. ஆஸ்பத்திரியில் இருந்த தலைவர்கள் இப்போது கமிஷனர் ஆபீசில் இருந்தார்கள்.

கிரியும் செல்லமுத்துவும் 'உள்ளே என்ன நடக்கிறது' ரகசியமாய் விசாரித்தார்கள்.

"நீங்கதான் கால பைரவன் பத்திரிகை குரூப்பா. போட்டோ எடுத்தீங்களா. காமிராவைப் புடுங்கிட்டாங்களா. காமிராவை உங்ககிட்ட குடுக்கக்கூடாதுன்னு சிகப்பு அணித்தலைவர் சத்தம் போடறாரு. போலீசே பத்திரிகைக்காரங்கள கூப்பிட்டு போட்டோ எடுக்கச் சொன்னதா கத்தறாரு."

ரகசியமாய் கேட்டதற்குப் பதில் உரத்த குரலில் வந்தது. வயிறு எரிந்தது. அண்ணன் காலை வாரி விட்டுட்டாரே என்ற கோபம் வந்தது.

என்ன காரணம்.

சிகப்பணிக்காரர்கள் வன்முறையில் ஈடுபட்டதாய் அந்த போட்டோ சொல்லி விடுமாம். அது அழிக்கப் படுவதே உத்தமமாம். சிகப்பணித் தலைவர்கள் வெளியே வந்தார்கள். அதில் ஒரு குறிப்பிட்ட தலைவர் கிரியை அருகே அழைத்தார்.

"ஸாரி பிரதர், ஹெல்ப் பண்ண முடியலை. கமிஷனர் ஃபிலிம் ரோல் தர மாட்டேன்னுட்டாரு." பதில் எதிர்பார்க்காமல் வண்டியேறிப் போனார். கிரிதரனுக்கு வெறி ஏறிற்று. எப்படியாவது அந்த ஃபிலிமைக் கைப்பற்ற வேண்டும் என்று மனது துடித்தது.

கமிஷனர் அழைக்க, உள்ளே போனார்கள். தங்கள்

கோரிக்கையை விண்ணப்பித்தார்கள். போலீஸ் எதிரே ஃபிலிம் கழுவி, நெகடிவ் பார்த்து எது தடையானதோ அது நீக்கி மற்றவை தங்களுக்குத் தரவேண்டும் என்று வாதிட்டார்கள். பத்திரிகை உரிமையைத் தடுக்கக் கூடாது என்று முறையிட்டார்கள். சில சமயம் அந்த போட்டோவும், போட்டோகிராபரும் சாட்சிக்கு போலீசே கூப்பிடும் என்றார்கள்.

பல கேள்விகளுக்குப் பிறகு ஃபிலிம் கழுவ கமிஷனர் ஒப்புக்கொண்டார்.

"யாரிடம் ஃபிலிம் இருக்கிறது." என்று கேட்டார். அசிஸ்டண்ட் கமிஷனர் ரத்னசபாபதியை வயர்லெஸில் தொடர்பு கொள்ள முயற்சித்தார். வேலைப்பளு அதிகமிருந்ததால் வாசலில் இருந்த எஸ்.ஐ.யைக் கூப்பிட்டார். இவர்களை அழைத்துப் போய் ஃபிலிம் ரோல் கொடுத்து, கூடவே இருந்து கழுவிப் பார்க்க உத்தரவிட்டார்.

"சார், அதில் ஒரு ப்ராப்ளம்." கார்வண்ணன் குறுக்கே பேச, என்ன என்பதாய் தலை நிமிர்த்தினார்.

"இது இம்போர்ட்டட் ஃப்யூஜி ஃபிலிம். ரொம்ப சென்ஸிடிவ் வேலை தெரிஞ்சவந்தான் கழுவ முடியும். மெட்ராஸ்ல ஒரே ஒரு ஸ்டுடியோலதான் இதை டெவலப் பண்ண முடியும்."

"யாரது."

"ராமு கரியத், நுங்கம்பாக்கம்."

"எனக்குத் தெரியும் சார். அந்த ஆளை." எஸ்.ஐ. விரைப்பாய்ப் பேச, அடுத்த திருட்டு முயற்சியும் ஆட்டம் கண்டது.

"சரி, கூடப் போ. ஜாக்கிரதை." கமிஷனர் சப்இன்ஸ்பெக்டரை எச்சரித்து அனுப்பினார். எஸ்.ஐ. யோடு கமிஷனர் ஆபீஸ் விட்டு வெளியே வந்தார்கள்.

ராமு கரியத் 'கால பைரவ'னின் ஃபிலிம்களை வழக்கமாகக் கழுவிக் கொடுக்கிறவன். அந்த இடத்தில் ஏதாவது கோல்மால் செய்யலாமே என்கிற எண்ணத்தில் மண் விழுந்தது. போலீஸ் உஷாராய் இருந்தது.

"செல்லமுத்து நீ போய் ராமு கரியத்த ஏற்பாடு பண்ணு. இன்னக்கி ஞாயிற்றுக்கிழமை. அவனைக் கண்டு புடிக்கிறது கஷ்டம். அவனைத் தயாரா வை. எல்லாம் சொல்லி வை. வேற ஆட்டோ புடி. நாங்க ஃபிலிமோட வரோம்."

செல்லமுத்துவைக் குறிப்பாய் தூண்டி விட்டு

எஸ்.ஐ.யுடன் ஆட்டோ ஏறினார்கள். ஆட்டோ ஏ.ஸி.யைத் தேடிக் கொண்டு ஓடிற்று. மதுரை மாவட்ட எஸ்.ஐ.க்கு வழியெல்லாம் சினிமாக்கதை சொல்லிக் கொண்டு வந்தார்கள். நெருங்கிய ஸ்நேகம் உண்டாக்கப் பார்த்தார்கள். ஏ.ஸி. ரவுண்ட்சில் இருப்பதாகச் சொல்ல, அவர் போன இடங்களையெல்லாம் விசாரித்துக் கொண்டு சென்றார்கள்.

ஆட்டோ மீட்டர் தொண்ணூற்றி இரண்டு ரூபாய் காட்ட, குப்புசாமி மீட்டர் கொடியிறக்கி துணி போட்டுக் கட்டினான். ஏ.ஸி. இன்னொரு சிகப்பணித் தலைவர் வீட்டில் இருப்பதாகக் கேள்விப்பட்டு ஆட்டோ அங்கு பறந்தது.

வளர்மதி மறுபடியும் கார்வண்ணன் வீட்டிற்குப் போன் செய்தாள்.

"அப்படி என்னாடி சண்டை, எதுக்குக் கோபிச்சுக்கிட்டுப் போன."

"ரொம்ப கஷ்டப்படுத்தறாரும்மா. உடம்பு சரியில்லன்னா, கேக்க மாட்டன்றாரு."

"அடிப்பாவி, நல்ல வார்த்தை சொல்லித் தூங்க வைக்காத, இப்படியா பண்ணுவா ஒருத்தி. காலையில போனவங்க வரலை. ராயப்பேட்டையில் ஏதோ கலாட்டாவாம். இப்போதைக்கு வருவாங்கன்னு தோணல. எங்கிட்ட ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதானே. இங்கயே தீர்த்திருக்கலாமே உங்க சண்டையை. ராத்திரி எட்டு மணிக்குப் போன் பண்ணு."

போன் துண்டிக்கப்பட்டது.

டீ குடித்துக் கொண்டிருந்த கிரிதரனுக்குப் புரைக் கேறியது. யார் நினைத்துக் கொள்கிறார்கள் என்று யோசித்தபடி கிரிதரன் வளர்மதியை நினைத்தான்.

உதவி கமிஷனர் சிகப்பணித் தலைவர் வீட்டிலிருந்து வெளியே வந்தார்.




'அட, ச்சே. நீயெல்லாம் ஒரு பொம்பளை.. உனக்கெல்லாம் ஒரு புருஷன்.. எப்படி புள்ளை பெத்த நீ. கனவுல பாயாசம் குடிச்சு கர்ப்பமாயிட்டியா'.

அம்மா வளர்மதியிடம் சீறினாள். "நான் என்னவோ ஏதோன்னு பயந்துட்டேன். ஆத்திரந்தான் படுவான்.

ஏண்டி வரலைன்னு கேக்கத்தான் கேட்பான். கோவப்பட்டு வந்துட்டா முடிஞ்சு போச்சா. இதான் சாக்குன்னு அவன் இந்தண்டை அந்தண்டை போவமாட்டானா, அடிசவமே."

"அதெல்லாம் செய்யாது, எனக்குக் கஷ்டம்னா புரிஞ்சுக்க வேண்டியதுதானே."

"புரியாத நோயா சொல்லணும். வெறும் தலை நோவுன்னா."

அம்மா தாழ்ந்த குரலில் தொடர்ந்து பேசினாள். வளர்மதி காது கேட்டுக் கொண்டிருப்பினும் மனசு வெறுமையில் நின்றது.

எதிரே நின்று சண்டை போடுகிறபோது உக்கிரம் வருகிறது. விலகிப் பிரிந்ததும் எல்லாம் முட்டாள் தனமாய் தெரிகிறது. பணிந்து போயிருக்கலாமோ என்று தோன்றுகிறது. ஆனால் உள் மனசில் பணிந்து போக விருப்பமில்லை. அம்மா சொல்வதுபோல் பொய் சொல்லப் பிடிக்கவில்லை.

பொய்யும் கபட நாடகமும், ஏமாற்றாத புருஷனிடம் செய்ய வேண்டுமா. கேவலமில்லையா. அப்போது படிப்புக்கு, புத்திக்கு, அன்புக்கு என்ன அர்த்தம்.

அது முட்டாளில்லை. மூர்க்கனில்லை. கேவலமான ஆளில்லை. ஆனால், இந்த இடத்தில் மட்டும் ஏன் இப்படி ரௌத்ரம் காட்டுகிறது. 'தூக்கம் வரலை வா' என்பது கொஞ்சம் கீழ்த்தரமில்லையா. இது ஏன் புரியாமல் கூப்பிடுகிறது.

நான் போயிருக்க வேண்டுமோ.. இது எனக்குப் பிடிக்கவில்லை அகௌரவம் என்று விவாதித்திருக்க வேண்டுமா.. விவாதிக்க விட்டால்தானே. காபியைத் தரையில் ஊற்றி, சாப்பாடு புறக்கணித்து, ஏகத்தாளமாய் பேசி.. நானும் பேசினேன்.

ஒருவேளை நான் முட்டாளோ. இரண்டு புத்தியோ. திடம் இல்லாதவளோ.. கம்பீரமாய் ஒரு நேரமும், கலங்கியபடி மறுநேரமும் இருக்கிறேனோ.

அது கலங்குமா.. 'வளர்மதி, வளர்மதி' என்று நினைக்குமா. கோபித்துக் கொண்டு விட்டோமே என்று வருத்தப்படுமா. யோசி.. நிதானமாய் யோசி. நாலு வருடம் குடித்தனம் செய்தும் புருஷனைக் கூட புரிந்து கொள்ளாதவள். இதை வீட்டில் யோசித்திருக்கலாம். பர்த் கிடைத்தும் தூங்க முடியவில்லை முதுகு வலிக்கிறது.

"ஒண்ணு சொல்லட்டா வளர்மதி. விட்டுக் கொடுக்கிறது கௌரதை விஷயம்னா, இங்கயே பத்து நாள் இருந்துடு. விட்டுக் கொடுத்திருக்கலாமேன்னு ஒரு தடவை தோணிச்சானாலும் கிளம்பிடு."

"மறுபடி அப்படி தொந்தரவு செய்துச்சுன்னா."

"உடம்பு நோவுன்னு சொல்லியும், தொந்தரவு பண்றவன் மனுஷனில்லை. உனக்கு இஷ்டமில் லைன்னு சொல்லியும் 'வா, எனக்கிஷ்டம்'னு சொல்லியிருந்தா தப்பில்லை."

"எப்படிம்மா."

"விட்டுக் கொடு வளர்மதி. பொம்பளைக்கு இது அல்ப விஷயம்."

"எனக்குத் தோணலை."

"விட்டுக் கொடுத்ததைச் சொல்லு. நேரடியா மறைமுகமா புரியட்டும்."

"தனக்கா."

"நாம வேற, ஆம்பளை வேற."

"எதுலம்மா."

"யோசிப்புல.. உழைப்புல.. அவஸ்தைல.. உடம்பு கொதிப்புல.. இது பணிஞ்சு போறதில்லை வளர்மதி. அரிசி கொடுத்து பருப்பு வாங்கறது."

"புருஷன் பொண்டாட்டிக்கு நடுவிலயா."

"எல்லா எடத்துலயும், எல்லா நேரத்துலயும் ஏதோ ஒரு விலை தரோம். ஒரு வியாபாரம் செய்யறோம். அம்மா புள்ளையா இருந்தாகூட இதுதான் வளர்மதி."

வளர்மதி யோசிக்கத் துவங்கினாள்.

ராமு கரியத் போட்டோ ஸ்டுடியோ பூட்டப் பட்டிருந்தது. செல்லமுத்து தளர்ந்து போய் படியில் உட்கார்ந்தான். இவ்வளவு பெரிய நகரத்தில் இவனை எங்குப் போய்த் தேடுவது என்று யோசித்தான். ஒரு வேளை ஏதாவது கோல்மால் செய்ய வேண்டுமெனில் ராமு கரியத் இடம்தானே சௌகரியம். வேறு இடம் ஒத்துக் கொள்ளாதே. போலீசிற்குப் பயப்படுமே. என்ன செய்வது. சோகத்தோடு பூட்டப்பட்ட கதவில் சரிந்து உட்கார்ந்தான். உள்ளே ஆங்கிலப் பேச்சு சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. கதவிடுக்கு வழியே பார்க்க, உள்ளே டெலிவிஷன் ஒளி தெரிந்தது. உற்சாகத்தோடு கதவு தட்ட, டி.வி. சத்தம் அமுங்கிப் போயிற்று.

பாதி போதையிலிருந்த ராமு கரியத் அந்த கெட்ட

காசெட்டை கக்கூசில் ஒளித்து வைத்தான். கக்கூசிற்கு மேலே உள்ள டாங்க்கில் இரும்புக் குழாய் விளிம்பில் அதை ஆடாதிருக்க வைத்தான். வாசல் கதவு தட்டுவது போலீசோ என்று சந்தேகப்பட்டான். அப்படியே போலீஸ் தட்டினாலும் கக்கூசிற்குப் போய் ஃப்ளஷை இழுத்தால் கெட்ட காசெட் நனைந்து போகும். நனைந்த காசெட்டை கெட்ட காசெட் என்று யாரும் கண்டு பிடிக்க முடியாது.

முகத்தை நீரால் துடைத்துக் கொண்டு கதவு திறக்க, செல்லமுத்து ஈ என்று இளிப்பது தெரிந்தது. இந்தக் கடங்காரந்தானா. கோபம் வந்தது.

"என்னா ராமு கரியத், ப்ளூஃபிலிமா."

"உள்ள வாடா நாயிண்ட மகனே, உள்ளே வா." ராமு கரியத் அவனைக் கொத்தாய் உள்ளே இழுத்தான். கதவை அறைந்து சாத்தினான்.

"நீ எதுக்குடா இவட வந்தது. பட்டி." தலையில் அடித்தான்.

"யோவ், போலீஸ்ல சொல்லிடுவேன். ரூமப் பூட்டிக்கிட்டு கெட்ட கெட்ட படமா பாக்கறே."

"அடேய், நானுன்னை சவட்டிகளையும்.. யாருடா ஃப்ளூஃபிலிம் பார்த்தது."

"அ.. கதவைப் பூட்டிக்கிட்டு திருவருட்செல்வரா பார்த்தே. யார்கிட்ட கதை விடறே."

"உனக்கென்னடா வேணும் இப்ப.."

"ஒரு முக்கியமான வேலை ராமு கரியத்."

"செய்ய முடியாது. வெளிய போ."

"லட்ச ரூபா வேலை ராமு கரியத். உன் லைஃப் டைம் வேலை."

"நா போலீசோன்னு பயந்து போயி. சொல்லித் தொலடா."

செல்லமுத்து சகலமும் விவரிக்க, ராமு கரியத் தீவிரமாய் யோசித்தான். கால பைரவனின் ஃபிலிம் டெவலப்பிங், பிரிண்டிங் அவன் நிரந்தர வருமானங் களில் ஒன்று. காசுக்கு அச்சப்படாத பத்திரிகை அது.

பல ஒட்டு வித்தை வேலைகளை, கசங்கிய ஃபிலிம் சுருள்களை கால பைரவன் தர, நேர்த்தியாய்ச் செய்து கொடுத்திருக்கிறான். கணிசமாய் பணம் சம்பாதித்திருக்கிறான்.

"ஒரு ரோல் ஃபிலிம் டெவலப் பண்ணனும். அவ்வளவுதானே.. ரோல் எங்கே."

"வரும்."

"எப்போது."

"ஒரு மணி நேரத்தில்."

"ஃபிலிம் ரோலை மாற்றிவிட வேண்டுமா."

"ஆமாம்."

"ட்ரை பண்ணலாம். உட்கார், படம் பார்."

"என்ன படம், ஃபாரினா."

"லோக்கல் திருவருட்செல்வர். அப்பர் எங்குற்றார். ஞானசம்பந்தர் கேட்க, சிவாஜி கணேசன் தலை வளைத்து, 'நான் இங்குற்றேன்' என்று சொல்வார்."

செல்லமுத்து அசடு வழிந்தான்.

"மலையாளி பெரிய ஆளுய்யா நீ. ப்ளூ படம் ஒளிச்சுட்டு திருவருட்செல்வரா மாத்திட்டியே."

"இது நல்ல படம் கண்ணா. ஒக்காந்து பார். படுத்துக் கிட்டுப் பார். ஆனா, கக்கூசுக்குள்ள மட்டும் போகத."
செல்லமுத்துவுக்கு கடைசி வார்த்தை புரியவில்லை.

உதவி கமிஷனரிடம், நகர கமிஷனரின் உத்தரவு சொல்லப்பட்டது.

"ஃபிலிம் என்னிடமில்லை. அந்த இன்ஸ்பெக்டரிடம் இருக்கிறது." உதவி கமிஷனர் கை விரித்தார். இன்ஸ்பெக்டர் எங்கே. விசாரித்தார். இன்ஸ்பெக்டருக்கு வேறு ஒரு தலைவர் வீட்டில் பந்தோபஸ்து பணியாம். அவரை ஃபிலிம் ரோலுடன் தன்னிடம் வரச்சொன்னார். கூட வந்த சப்-இன்ஸ்பெக்டரையே இன்ஸ்பெக்டரை அழைத்து வரச்சொன்னார்.

கிரிதரன் நகம் கடித்தபடியே சப்-இன்ஸ்பெக்டரோடு ஆட்டோவில் பயணம் செய்தான். கார்வண்ணன் உதவி கமிஷனரோடு தங்கிவிட்டார்.

ஆழ்ந்த யோசிப்பில் மறுபடியும் ஒரு திட்டம் கிரிதரன் மனதில் உருவாயிற்று.

"அண்ணே, சிகரெட் இல்லண்ணே.. வாங்கிக்கலாமா." சப்-இன்ஸ்பெக்டரை வினவ, சப்-இன்ஸ்பெக்டர் தனக்கும் ஒரு பாக்கெட் வாங்கச் சொன்னார். சப்-இன்ஸ்பெக்டரை அழைத்துக் கொண்டு வெற்றிலை பாக்குக் கடைக்குப் போகையில் குப்புசாமியைத் தனியே அழைத்து எதிர் பக்க ஸ்டூடியோவைக் காட்டி ஒரு ப்யூஜி ஃபிலிம் வாங்கி வரச் சொன்னான்.

குப்புசாமி வாங்கின ப்யூஜி ஃபிலிம் ரகசியமாய் கிரிதரனுக்குத் தரப்பட்டது. சப்-இன்ஸ்பெக்டர் இன்ஸ்பெக்டரைத் தேடிப் போகையில் அட்டைப்

பெட்டி ஒரு பையிலும் புதிய ஃபிலிம் சுருளை இன்னொரு பையிலும் கிரிதரன் போட்டுக் கொண்டான். இன்ஸ்பெக்டர் ஃபிலிம் ரோலை சப்-இன்ஸ்பெக்டரிடம் கொடுத்தார். ஏ.சி.யிடம்தான் தரவேண்டும் என்று எச்சரித்தார்.

சப்-இன்ஸ்பெக்டருடன் உதவி கமிஷனர் நோக்கி மறுபடியும் பயணமானார்கள். சப்-இன்ஸ்பெக்டரின் மேல் பாக்கெட்டில் ஃபிலிம் ரோல் இருந்தது. ஏதாவது வாங்கிக் கொடுத்து ஃபிலிம் ரோல் மாற்றிவிடலாமா.

"தண்ணி போடுவீங்களா சார்." கிரி, சப்-இன்ஸ்பெக்டரைக் கேட்டான்.

"இந்த ஃபிலிம் ரோல ஏ.சி.கிட்ட குடுக்கற வரைக்கும் போடமாட்டேன். போதுமா." எஸ்.ஐ. விஷமமாய்ச் சிரித்தார்.

"அப்படி என்ன சார் இருக்கு இந்த ஃபிலிம்ல." இன்ஸ்பெக்டர் தானாகக் கேட்டார்.

"சில முக்கியமான போட்டோஸ்."

"எவ்வளவு விலை பெறும்."

"உங்களுக்கு எவ்வளவு வேணும்."

"இருபதாயிரம் ரூபாய்."

"இருபத்தஞ்சாயிரம் தரேன் சார். ஃபிலிம் ரோலக் குடுங்க."

"எப்படி தருவீங்க."

"கேஷ்.. இன்னிக்கி சாயங்காலத்துக்குள்ள எங்க முதலாளிகிட்ட சொல்லி வாங்கித் தரேன்."

"இத்தினி வேல்யூவான பொருளை உன்கிட்ட கொடுத்துட்டு நா மாட்டிக்கிணு சாகணுமா."

"கேட்டீங்களே சார்.. நீங்கதான் கேட்டீங்க."

"சும்மா உன் தராதரம் தெரிஞ்சுக்கக் கேட்டேன்." சிரிக்கும் சப்-இன்ஸ்பெக்டரின் கழுத்தை நெரித்துக் கொன்றுவிட வேண்டும்போல் கிரிதரனுக்கு இருந்தது.

செல்லமுத்து ஸ்டுடியோ லாபில் ஏதேனும் ஏற்பாடு செய்திருப்பான் என்ற நம்பிக்கை வந்தது. பொறுமையோடு யோசித்துக் கொண்டு வந்தான். இதில் ஒரு போட்டோ கிடைத்துவிட்டால்கூட கட்டுரை பிரமாதமாக எழுதிவிடலாம். போட்டோ இல்லாத கட்டுரை, மனைவியில்லாத கணவன் போல் வெறுமையானது. கிரிதரனுக்கு வளர்மதி மீது அதீதமாய் ஒரு காதல் வந்தது. அவளைக் கடிந்து கொண்டது இப்போது இழிவாய்ப்பட்டது. சாகிறபோது தண்ணீர் இல்லாமல்

சாவேன் என்றாள். இப்போது அப்படித்தான் செத்துக் கொண்டிருக்கிறேன். நெஞ்சுள் துக்கம் பொங்கியது. 'வளர்மதி ஐ லவ்யூ' என்று கத்தத் தோன்றியது.

ஏ.சி. சிகப்புத் தலைவர் வீட்டிற்குள் பேசிக் கொண்டிருக்கிறாராம். வெளியே காவலர்களுக்கு அன்றைய பந்தோபஸ்துபடி ரொக்கமாய் வழங்கப் பட்டுக் கொண்டிருந்தது. காவலர்கள் கூட்டமாய் நின்று கையெழுத்துப் போட்டு காசு வாங்கிக் கொண்டிருந்தார்கள். எஸ்.ஐ. ஆவலுடன் அந்தக் கூட்டத்தை எட்டிப் பார்த்தார். வீட்டிற்குள் போனார். ஏ.சி. யாருடனோ சிரித்து விட்டேத்தியாய்ப் பேசிக் கொண்டிருந்தார்.

"இன்ஸ்பெக்டர்கிட்ட ஃபிலிம் ரோல் வாங்கிட்டேன் சார். இதோ இருக்கு."

"வெரிகுட், அதைக் கொடுத்து டெவலப் பண்ணச் சொல்லு." சப்-இன்ஸ்பெக்டர் அவசரமாய் சல்யூட் அடித்து விலகினார். வாசலில் நின்ற கிரிதரனிடம் ஃபிலிம் ரோலைக் கொடுத்தார். பந்தோபஸ்து படி வாங்க கூட்டத்தை நோக்கி ஓடினார்.

கிரிதரனுக்கு ஃபிலிம் ரோலைத் தொட்டவுடன் உடம்பெல்லாம் சிலிர்த்தது, தொலைவில் நின்ற கார்வண்ணனைப் பார்த்தான். 'பளிச்'சென்று உள்ளே ஒரு மின்னல் அடித்தது. அட்டைப் பெட்டியைத் திறந்து ஃபிலிம் ரோலைப் போட்டான். சட்டென்று பின் பாக்கெட்டில் செருகிக் கொண்டான். இடது பக்க புது ஃபிலிம் ரோலைக் கையில் எடுத்துக் கொண்டான். அங்கேயே நின்றான்.

ஏ.சி. வெளியே ஓடி வந்தார்.

"யோவ், எஸ்.ஐ. ஃபிலிம் ரோல் எங்கே."

"அவர்கிட்ட கொடுத்துட்டேன் சார்."

"முண்டம். வாங்குய்யா அதை. உன்னைத்தானே நேரே போய் டெவலப் பண்ணச் சொன்னார். ஏன்யா அவன்கிட்ட கொடுத்தே."

எஸ்.ஐ. அந்த ஃபிலிம் ரோலைப் பாய்ந்து பிடுங்கினார்.

"எதனா மாத்திட்டானா பாரு." ஏ.சி. குரல் கொடுக்க பாண்ட்டின் முன் பக்கங்களையும், சட்டையையும் தடவிப் பார்த்தான்.

"ஒன்றுமில்லை சார்." சல்யூட் செய்தான்.

"கூடவே போ. டெவலப் பண்ணி நெகடிவ் கொண்டா." ஏ.சி. கட்டளையிட்டு உள்ளே திரும்பி

னார். அந்த ஃபிலிம் நெகடிவ் கிரிதரனின் பின் பாக் கெட்டில் இருந்தது. அவன் உடம்பெல்லாம் நடுங் கிற்று. ஏனோ மனசிற்குள் வளர்மதியை வணங்கத் தோன்றிற்று. ஆனால் ஆரம்பித்த நாடகத்தைத் தொடர்ந்து போடவேண்டும்.

சகலமும் கவனித்த கார்வண்ணன் அவன் அருகில் போய் அவன் வலக்கையை அழுத்தினார். ஆட்டோ, ராமு கரியத் ஸ்டூடியோவை நோக்கி ஓடிற்று.

செல்லமுத்து, 'ஆலயமணிக் கதவே தாழ் திறவாய்' பாட்டுக் கேட்டுக் கொண்டிருந்தான்.


6

அந்தி நேரத்தில் ராமு கரியத் வாசலை எட்டிப் பார்த்தான்.

"என்னடா செல்லமுத்து, உங்க ஆளுங்க யாரையும் காணாம். வூட்டுக்கு பூட்டாங்களா, நம்மள வேக வச்சிட்டு."

"வருவாங்க கரியத்."

"மயிர வருவாங்க. எழுந்து போடா வெளிய." கோபத்துடன் சீறினான்.

செல்லமுத்து டி.வி. டெக்கை அணைத்து விட்டு வாசலுக்கு வர, ஆட்டோ வந்து நின்றது.

"கரியத், கரியத்.. ஃபிலிம் ரோல் வருது. மாத்த ஏற்பாடு செய்." முணுமுணுத்து விட்டு வந்தவர்களுக்கு வழி விட்டான்.

"கமிஷனர் அனுப்பிச்சாரு. ஒரு ஃபிலிம் ரோல் டெவலப் பண்ணணும்." எஸ்.ஐ. உள்ளே நுழைந்தபடி கரியத்திடம் பேசினான்.

"அதெல்லாம் பண்ணலாம். செல்லமுத்து, மூணு பேருக்கு டிபன் சொல்லுப்பா. டிபன் சாப்பிட்டுத்தான் டெவலப்பெல்லாம்." கார்வண்ணன் உற்சாகமாகப் பேசினார்.

"டாய்லெட் எங்கயிருக்கு." எஸ்.ஐ. ஜிப்பைத் தடவியபடி பேச, கிரிதரன் அவரை அழைத்துக் கொண்டு போனான்.

பின்னால் ஓடிய கரியத்தை கார்வணணன் கட்டிப் பிடித்து நிறுத்தினார்.

"விடுங்க சார், அந்தாளு கக்கூஸ் போறான்."

"போகட்டும், உனக்கு என்ன."

"அந்த ஆளு ஃப்ளஷ் புடிச்சு இழுத்துடுவான் சார்."

"இழுக்கட்டும், உனக்கு என்ன."

"சாவடிக்கிறீகளே எல்லோரும்."

"கரியத், நான் சொல்றதக் கேளு. ஃபிலிம் டெவலப் பண்ண முடியாதுன்னு சொல்." கார்வண்ணன் மிகவும் தாழ்ந்த குரலில் பேசினார்.

"நான் பாட்டுக்கு குடிச்சிட்டு கெட்ட படம் பார்த்துக்கிட்டிருந்தேன். மூணு மணி நேரமா கடைய திறந்து வச்சது டெவலப் பண்ண முடியாதுன்னு சொல்றதுக்கா. உங்களுக்கெல்லாம் என்ன, பைத்தியமா."

"அவங்கிட்ட இருக்கறது புது ரோல். நம்ம ரோல் கிரிகிட்ட இருக்கு." கார்வண்ணன் பற்களுக்கிடையே இருந்து உதடு பிரியாது சொற்கள் வந்தன.

"மாத்திட்டீங்களா."

"ஆமா."

"அப்போ சப்-இன்ஸ்பெக்டரை பேக் பண்ணி அனுப்பணுமா."

"ஆமா."

"அவ்வளவுதானே.. அத எங்கிட்ட விடு." மேஜைக்குக் கீழிருந்த பிராந்தி பாட்டிலிலிருந்து ஒரு மிடறு குடித்தான். எஸ்.ஐ. வெளியே வர, தள்ளாடி கை கூப்பினான்.

"சார்.. ஐயாம் ஸாரி.. வெரி ஸாரி. இது இம்போர்ட்டட் ரோலாம். நான் டெவலப் பண்ண முடியாது. இந்த நேரம் என்னால் ஆர்டினரி ரோல் கூட டெவலப் பண்ண முடியாது. நான் ரெண்டவரா தண்ணி போட்டுக்கிட்டிருக்கேன். டுடே சண்டே. ரொம்ப ஸாரி சார். வேலை செய்ய முடியாது. இந்த நிலமைல செஞ்சு ஏதாவது ஏடா கூடமாயிடுச்சுன்னா உங்களுக்கும் கெட்ட பேர், எனக்கும் கெட்ட பேர். ஸாரி, ரொம்ப ஸாரி." மறுபடி கை கூப்பினான். "மாப்பு தரணும்." மீண்டும் ஒரு முறை கை கூப்பினான்.

"இப்ப என்னங்க பண்றது." எஸ்.ஐ. திணற.

"எங்கிட்ட கொடுத்துட்டுப் போங்க. நாளை கார்த்தால டெவலப் பண்றேன்." கையேந்தினான்.

"அதெல்லாம் தரமுடியாது." எஸ்.ஐ. பின்வாங்க, "உங்க இஷ்டம்." மறுபடி கை கூப்பினான்.

"என்ன கார்வண்ணன், இப்படி தண்ணில மிதக்கறவன் கிட்ட கூட்டிட்டு வர்றீங்க."

"எனக்கு அதிர்ஷ்டம் இல்ல சார். கொண்டு போய்

ஏ.சி.கிட்டயே கொடுத்துடுங்க. கமிஷனர் கிட்ட டெவலப் பண்ணலைன்னு சொல்லிடுங்க. எனக்கு இந்த ரோலே வேணாம். எந்த நேரத்துல கை வச்சதோ பேஜாராப் போச்சு." கார்வண்ணன் நடித்தார்.

"குப்புசாமி, எஸ்.ஐ.ய ஓட்டலுக்கு கூட்டிட்டுப் போய் டிபன் வாங்கிக் கொடுத்து ஏ.சி. கிட்ட விட்டுடு. பாவம், நம்மளை மாதிரி அவரும் சாப்பிடலை. பேட்டா வேற போச்சு. ஸாரி சார். ரொம்ப ட்ரபிள் கொடுத்துட் டோம்." எஸ்.ஐ. வாசலுக்கு நகர எல்லோரும் கூடி வழியனுப்பினார்கள். ஆட்டோ தெரு முனையில் மறைய, ஸ்டுடியோவுக்குள் பேயாய் ஓடினார்கள். கை குலுக்கினார்கள். கிரிதரன் நீட்டிய ஃபிலிம் டப்பாவுக்கு முத்தம் கொடுத்தார்கள். இரண்டு அங்குலத்துக்கு இரண்டங்குல நீல டப்பாவை ஆசையாய்ப் பார்த்தார்கள். 'யம்மா.. என்ன கஷ்டம் இது கிடைக்க' மனசுள் நினைத்தார்கள்.

"ராமு கரியத் உன்னை உக்கார வச்சு கோவில் கட்டணும்டா. என்னா நடிப்பு. என்னா நடிப்பு." கார்வண்ணன் பரவசப்பட்டார்.

ராமு கரியத் இருட்டறைக்குள் நுழைய, ஸ்டூடியோ வின் வெளிக்கதவைப் பூட்டிவிட்டு, மறுபடி போலீஸ் சந்தேகப்பட்டு வந்தால் என்ன செய்வது என்ற நினைப் பில் எதிர்ப்பக்க இருட்டில் மறைந்து நின்றார்கள்.

"கட்டுரை யோசனை பண்ணு கிரிதரா." கார்வண்ணன் கட்டளை இட்டார்.

"அதுதான் சார் செய்யறேன்."

"எல்லாத்தையும் எழுதிடணும்." செல்லமுத்து பரபரத்தான்.

"கூடாது. போலீசை அரசாங்கத்துக்கிட்ட மாட்டி விடக்கூடாது." கிரிதரன் திட்டவட்டமாகச் சொன்னான்.

"கரெக்ட். இந்த நியூஸ்தான் முக்கியம். இந்த போட் டோஸ்தான் முக்கியம். எப்படி இந்த போட்டோஸ் நமக்குக் கிடைச்சிதுங்கறது முக்கியமில்லை." கார்வண்ணன் ஆமோதித்தார். காத்திருந்தார்கள், நகம் கடித்தார்கள், கால் மாறி நின்றார்கள்.

ஸ்டுடியோ விளக்கு அணைந்து, அணைந்து எரிந்தது. வேலை முடிந்து விட்டது என்கிற சிக்னல் அது. ஓடிப்போய் ஸ்டூடியோவைத் திறந்தார்கள். இருபத்தாறு ஃபிரேம் எக்ஸ்போஸ் செய்யப்பட்டது.

ஆறு ஃபிரேம் அவுட் ஆஃப் ஃபோகஸ். இருபது அற்புத மான படங்கள். சிகப்பு அணி வருகை, வெள்ளை அணி தடுப்பு, சிகப்பு அணி தாக்குவது, வெள்ளை அணி தாக்கு வது, வேட்டி உருவுவது, போலீஸ் தடியடி, வயசாளி யின் அலைக்கழிப்பு எல்லாம் மிகத் தெளிவாய் வந்தி ருந்தன. செல்லமுத்து சந்தோஷம் தாங்காமல் அழு தான். கார்வண்ணன் அவனைக் கட்டிக் கொண்டார்.

"நீ போ. உடனே போ. போய் கட்டுரை எழுது." கிரிதரனைத் துரத்தினார். டெவலப் செய்யப்பட்ட ஃபிலிம் பிரிண்ட் போடப்பட்டது. ஆயிரம் ரூபாயை உருவி, கார்வண்ணன் ராமு கரியத் பையில் சொருகினார். அவன் கன்னத்தில் முத்தமிட்டார். ராமு கரியத் நினைவிற்கு வந்தவனாக கக்கூஸிற்கு ஓடினான். ஈரம் சொட்ட சொட்ட கெட்ட காஸெட்டோடு வந்தான். தலையில் அடித்துக் கொண்டான்.

"எஸ்.ஐ. ஃபிளஷ் இழுத்துட்டானே.. மொத்தமும் போச்சே." ராமு கரியத் கூவ, கார்வண்ணன் விபரம் கேட்டு மேலும் முன்னூறு ரூபாய் கொடுத்தார். டிரையரில் உலர்ந்த போட்டோக்களை எடுத்துக் கொண்டு பத்திரிகை அலுவலகத்திற்கு வந்தார். கிரிதரன் எழுத எழுத மேட்டர் கம்போஸ் ஆயிற்று. படங்களை வரிசைப்படுத்தி பேஜ் தயாராயிற்று.

இரவு இரண்டு மணிக்கு அட்டைப்பட ஆப்செட்டும் உள்ளே ஓட வேண்டிய அலுமினிய ப்ளேட்டும் தயாராயின. மூன்று மணிக்கு அச்சு இயந்திரத்தில் முடுக்கப்பட்டன. தடார் தடார் என்று அச்சு இயந்திரத்தில் சுழன்று பேஜ் மடித்துப் போட்டது. அட்டையைப் புத்தகத்தில் வைத்து தனியே பின் அடித்தார்கள். முதல் பத்தாயிரம் காப்பி சென்னை நகரத்தில் எல்லா கடைகளுக்கும் காலை ஆறு மணிக்கு டெலிவரி செய்யப்பட்டது. குயில்கள் கூவின.

"செல்லமுத்து, கிரிதரன், வாங்க. நம்ம வீட்ல காபி சாப்பிட்டுட்டு போலாம்."

கார்வண்ணன் குப்புசாமியின் ஆட்டோவில் ஏறினார். அச்சிலிருந்து முதலில் வந்த பத்திரிகையை மனைவியிடம் நீட்டினார்.

"இதுதாண்டி வாரப் பத்திரிகை.." அட்டகாசமாய் சிரித்தார். சோபாவில் சுருண்டு உட்கார்ந்திருந்த கிரிதரனைக் காட்டி, "இவன்தான் இதுக்கு ஹீரோ." என்று புகழ்ந்தார்.

"என்னத்த ஹீரோ.." காபி டம்ளர் நொக் என்று எதிரே வைக்கப்பட்டது.

"நீ ஏண்டி சலிச்சுக்கற."

"பொண்டாட்டி கூட சண்டை போட்டு ஊருக்குத் துரத்திட்டு இங்க ஹீரோ வேஷம் போடறாரா இவரு.. முதல்ல ஒழுங்கா குடித்தனம் பண்ணச் சொல்லுங்க உங்க ஆசிரியரை. பாவம், அந்தப் பொண்ணு. தஞ்சாவூர்லேர்ந்து மூணு தடவை போன் பண்ணிடுச்சு. வரட்டுமா, வரட்டுமான்னு."

கிரிதரன் திடுக்கிட்டான். மெல்ல தலை குனிந்தான். "மூணு முறை போனா." மனம் புழுங்கினான். கார்வண்ணன் விசாரிக்க, தயங்கித் தயங்கி விஷயம் சொன்னான்.

"வீட்டுக்கு வீடு வாசப்படி. இந்த சண்டை எங்க வீட்லயும் உண்டு. கிரிதரா, பத்திரிகைக்காரனுக்கு முதல் பொண்டாட்டி பத்திரிகைதான். முதல் பொண்டாட்டி மேல் அக்கறையா இருக்கணும். ரெண்டாவது பொண்டாட்டி மேல் பிரியமா இருக்கணும். வரச்சொல்லி தந்தி கொடு. உனக்கு ரெண்டுநாள் லீவ். ஆபீஸ் பக்கம் தலை காட்டக்கூடாது."

"ஒண்ணு சொல்றேன் வளர்மதி. இதுக்கெல்லாம் கோச்சுக்கிட்டு கிளம்பாதே."

"ஏம்மா."

"உன் கஷ்டத்தை அவன்கிட்ட சொல்லு. பெரிசு படுத்தியாவது சொல்லு. தன்னை தன் புருஷன் புரிஞ்சுக்கணும்னு பொம்பளை ஆசைப்படறது தப்பில்லை. ஆனா முடியாது. புரிஞ்சுக்க எந்த ஆம்பளையாலும் முடியாது. நான் சொல்றது புரியுதா வளர்மதி."

"பொம்பளை வேற, ஆம்பளை வேற. அது உடம்பு வேற. நம்ம உடம்பு வேற. உடம்பு வேறன்றச்ச புத்தியும் வேறயாத்தான் இருக்கும். கேட்டுக் கேட்டு, பார்த்து பார்த்து, பேசிப் பேசி, சண்டை சச்சரவு பண்ணி கொஞ்சம் போலும் புரிஞ்சுக்கலாமே தவிர, மொத்தமா ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்க முடியாது. ஆம்பளை வேற இனம், பொம்பளை வேற இனம்."

"மனுஷாளுங்கதானம்மா ரெண்டு பேரும்." வளர்மதி அலுப்புடன் பேசினாள்.

"மனுஷாள்தான். புள்ளை பெக்கறது எத்தனை கஷ்டம்னு ஆம்பளைக்கு எவ்வளவு புரியும். கஷ்டம்னு

தான் தெரியும். புள்ளை வயத்துக்குள்ள புரள்றது எத்தனை சுகம்னு தெரிஞ்சுக்க ஆம்பளையால முடியுமா. சொல்லிப் புரிய வச்சுருவியா. புஸ்தகம் படிச்சு புரிஞ்சுக்க முடியுமா. ஆம்பளை உடம்புலயும் நாம அறியாத விஷயம் உண்டு வளர்மதி. எதிர் எதிரா இருக்கறதுல தான் என்னா என்னான்னு எட்டிப் பார்க்கத் தோன்றும். ரொம்ப கலந்துட்டோம்னா அடச் சே, இதானான்னு போயிடும்."

"எனக்கு என்னவோ திரும்பிப் போறது அவமானமாவும் இருக்கும். ஆசையாவும் இருக்கு. நான் விட்டுக் கொடுக்கறனே, நீ ஏன் விட்டுக் கொடுக்கக் கூடாதுன்னு அவர் மேல கோவம் வருது."

"நல்லவன் விட்டுக் கொடுப்பான். அருமை தெரிஞ்சவன் பணிஞ்சு போவான். நடுவுல விவரம் புரியாத கோவம் வரும். புரிய வை. பேசு. அப்படியும் ஆம்பளை ஆடினா அறுத்துக்கிட்டு வா, அறுக்கற தைரியத்தோட வா. இரண்டுங்கெட்டானா அலையாதே."

"அம்மா இப்படி பேசுவாளா." வளர்மதி திகைப்புடன் நிமிர்ந்து பார்த்தாள்.

"நாங்க அடங்கி ஒடுங்கி இருந்துட்டம். நீங்க தொட்டதுக்கெல்லாம் ஆவேசப்படறீங்க. அறுத்துக்கடின்னா அதெப்படின்னு பார்க்கறீங்க. கயிறைப் பிடிச்சுட்ட மேலே ஏறு.. இல்லை, சரசரன்னு சறுக்கி கீழே நில்லு. ஊஞ்சல் ஆடாத நடுவுல. அறுந்து செத்துருவ. புரியுதா. நான் பயமுறுத்தலடீ. பயப்படற அளவுக்கு கிரி மோசமான பையனில்லை. நான் பயப்படறது உன் பதட்டம் பார்த்துத்தான்.. நிலை கொள்ளாது தவிக்கறது பார்த்திட்டுத்தான்.."

"அம்மா, நான் ராத்திரி வண்டிக்குக் கிளம்பறேன்."

வளர்மதி பிள்ளையுடன் வண்டி ஏறினாள்.

எக்மோரில் இறங்கியதும் வளர்மதியின் கண்களில் புதிய கால பைரவன் தென்பட்டது. இரண்டரை ரூபாய் காசு கொடுத்து வாங்கினாள். ஆட்டோவில் குழந்தையை இடுக்கிக் கொண்டு புத்தகம் பிரித்தாள்.

'நேத்திக்குக் காலைல நடந்த கலாட்டா.. இன்னிக்கு வாரப் பத்திரிகைல எப்படி வந்தது.' ஆச்சரியப்பட்டாள். போலீஸ் தடியடி நடத்தியதும், போட்டோ கிராபர் அடிபட்டதும், ஃபிலிம் ரோல் பிடுங்கப்பட்டதும், மாற்றப்பட்டதும் அங்கே நடந்தன என்று கட்டுரை விவரித்திருந்தது. வேறு எந்த வாரப்

பத்திரிகையும் செய்யாத வேகத்தில் கால பைரவன் இயங்கியது தனியே குறிப்பிடப்பட்டு இருந்தது.

முதலாளி கார்வண்ணன், ஆசிரியர் கிரிதரனுக்கும், போட்டோகிராபருக்கும், ஆட்டோ டிரைவருக்கும் தனித்தனியே நன்றி சொல்லியிருந்தார்.

'அப்போ.. நேத்தி முழுக்க நாயா அலைஞ்சிருக்கும் இது.' வளர்மதி புருஷனுக்காக துக்கப்பட்டாள். இனிமேல் எப்ப கூப்பிட்டாலும் கோபித்துக் கொள்ளக் கூடாது என்று முடிவு செய்தாள். மாற்றுச் சாவி போட்டு கதவைத் திறந்தாள். பக்கத்து வீட்டில் முழு பாக்கெட் பால் கடன் வாங்கி அடுப்பு மூட்டினாள். டிகாஷன் இறக்கினாள். குழந்தைக்குப் பாலை ஆற்றிக் கொடுத்து தூங்கச் செய்தாள். இறங்கின டிகாஷனைப் பாலில் ஊற்றி காபி கலந்தாள். மறுபடி கட்டுரையை நிதானமாய் படித்தாள்.

வாசல் பக்கம் நிழலாடிற்று. அவன் அங்கேயே நின்று குழந்தைக் கனிவுடன் பார்த்தான். சமையலறையில் நிற்கும் வளர்மதியை ஏறிட்டு நோக்கினான். சிரித்தான்.

"பல்லு தேச்சிட்டீங்களா.. காபி தரட்டுமா. ராத்திரி எதுனா சாப்பிட்டீங்களா. இல்லையா. இன்னிக்கு என்ன சமைக்கட்டும். அரைமணில சமைச்சிடுவேன். உடனே ஆபீஸ் போகலாம்."

"இன்னிக்கும், நாளைக்கும் ஆபீஸ் லீவு." கிரிதரன் தாழ்ந்த குரலில் பேசினான். மனைவிக்கு அருகே போய் அவள் தலையை வருடினான்.

இரண்டு பேரும் ஒரே சமயம் நிமிர்ந்து, "ஸாரி." என்று சொன்னார்கள். அப்படி சொன்னதற்கு சிரித்தார்கள்.

"இன்னிக்கு என்ன சமைக்கட்டும்."

"காரக்குழம்பும், உருளைக்கிழங்கு கறியும்."

"ஏன்."

"போன தடவை சாப்பிட விட்டுப் போச்சே."

"இன்னிக்கும் அதான் சாப்பிடணுமா."

"என்னிக்கும் இதையே போட்டாலும் சாப்பிடுவேன்."

"நிச்சயமாவா."

"நிசம்மா."

"வா, வந்து சாப்பிடு." அவள் அவனைத் தன்னோடு இழுத்துக் கொண்டாள். வளர்மதி.. வளர்மதி என்று அவன் குழைந்தான்.

ஏழு மணிக்கு வெளியே பல குயில்கள் கூவிக்

கொண்டிருந்தன. உள்ளே கட்டிலின் விளம்பு சுவரில் கீறலிட்டு சத்தம் எழுப்பிக் கொண்டிருந்தது.

"ஏம்பா அப்படி ஒரு கோவம் உங்களுக்கு."

"நீ இல்லையேன்றதுதான்."

"இதுதான் நானா."

"இல்லை. இது நீயில்லை. ஆனா, நீ இருக்கறபோது இதுதான் நினைப்பு. நீ இல்லைன்றபோது.." பேச்சு நிறுத்தினான்.

"சொல்லுங்க. இல்லைன்றபோது.." அவள் உலுக்கினாள்.

"உதிர்ந்த பூ, உடுத்திக் கட்டின உடை, உருட்டிவிட்ட பாத்திரம், உட்கார்ந்த இடம், நின்ன நிலை, சிரிச்ச சிரிப்பு, அது வேதனை வளர்மதி."

"நேத்து ரொம்ப கஷ்டப்பட்டீங்களா."

"நீ இல்லைன்னா கஷ்டம்தான்."

"அது கேட்கலை. வேலைல ரொம்ப கஷ்டமா."

அவன் யோசித்தான். "இல்லை, அவ்வளோ இல்லை. கொஞ்சம் இங்கே அங்கே அலைஞ்சோம்." பொய் சொன்னான்.

"ரா முழுக்க வேலையா."

"அப்படித்தான் சில சமயம்."

"நான் ரொம்ப முட்டாள். பொம்பளை இல்லை."

"நான்கூட முட்டாள்தான் வளர்மதி."

"என்னவோ ஒரு வீம்பு எனக்கு."

"எல்லாம் தெரிஞ்சு ஏம்பா இப்படி சண்டை போடறம்."

"அதுவும் ஒரு மாதிரி லவ்வுன்னு எனக்குத் தோணுது."

"எனக்கும். கிளம்பிட்டேனே தவிர, உள்ள ஏன் இப்படின்னு ஒரு ஏக்கம்." அவள் அவன் நெஞ்சு தடவினாள்.

டெலிபோன் ஒலித்தது. "அந்த போட்டோகிராபர் பையனுக்கு எதுனா பண்ணணுமே. என்ன செய்யலாம் கிரிதரா. அந்த மினோல்டாவ அவங்கிட்டயே கொடுத்துரட்டுமா." அது கார்வண்ணன் குரல்.

"அவன் தம்பிக்கு மெடிக்கல் சீட் கிடைச்சிருக்கு சார். ரெண்டாயிரம் ரூபா கடன் கேட்கணும்னு சொன்னான்."

"ரெண்டுமே செஞ்சுடுவோம்."

"சரி சார்."

"உனக்கு இருநூறு ரூபாய் இன்க்ரீஸ் இந்த

மாசத்துலேர்ந்து."

"ஸார்."

"என்ன கிரி.."

"வளர்மதியும், பையனும் ஊர்லேர்ந்து வந்துட்டாங்க."

"வெரிகுட்.. வெரிகுட்.. வளர்மதி எங்கே."

"இங்கதான் இருக்கு சார்."

"இங்கதான்னா."

"பிரயாண களைப்பு. அசந்து தூங்குது."

"தூங்கட்டும். பொம்பளைய சும்மா சும்மா தொந்தரவு பண்ணாத."

"சரி சார். நான் நாளைக்கு."

"ரெண்டு நாள் கழிச்சு வந்தா போதும். ரெஸ்ட் எடுத்துக்கோ." போன் துண்டிக்கப்பட்டது.

"திருடு. புளுகு." அவள் பொய்க் கோபத்துடன் அவன் உதட்டைத் திருகினாள்.

"மணி ஏழு. நான் தூங்கறேன்னா, உங்க முதலாளி என்ன பத்தி என்ன நினைச்சுக்குவாரு. நான் இனிமே தூங்கவும் மாட்டேன். உங்களைத் தூங்க விடவும் மாட்டேன்." அவனை இறுக்கிமுத்தமிட்டாள்.

அடுத்த அரைமணியில் கிரிதரன் கட்டிலில் அயர்ந்து தூங்க, சமையல் அறையில் காரக்குழம்பு, வாசனையாய் நுரையோடு கொதித்துக் கொண்டிருந்தது.

**சுபம்**

கதை, கவிதை மற்றும் கடிதப் போக்குவரத்து, டி.டி. அல்லது எம்.ஓ. இவைகளை SREE AISHVARYA PUBLICATION ஆனந்த நாவல், 77, மாதவரம் நெடுஞ்சாலை, காந்தி பூங்கா எதிரில், பெரம்பூர், சென்னை-600 011 என்ற நிர்வாக அலுவலக முகவரிக்கே அனுப்ப வேண்டும்.

போன் : 044-25512661

Anantha Navel Owned & Published by M.P. Chandra Sekaran at 50/1, Pycrafts Road, 1st Street, Royapettah, Chennai -600 014 and Printed by R.Murugan at Wonder Prints, 14, Weavers Street, Triplicane, Chennai - 600 005.